ஓம்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

YOGA SUTRAH

# யோகசூத்திரம்.

BY PATANJALI

மதுரை பிரஹ்மஞ்ஞான சபைத்தலைவராயிருந்து காலஞ்சென்ற

ப. நாராயணஐயரவர்கள், பிரஹ்மஸ்ரீ ஸீதாராமசாஸ்திரியார்

அவர்களின் உதவியைக்கொண்டு

தமிழில் மொழிபெயர்த்துக் குறிப்புரைகளுடன்

வெளியிட்ட முதற்பதிப்பு

மேற்படி ஞானசபைக்கு இப்போது

அக்ராஸனராயுள்ள பிரஹ்மஸ்ரீ

அ. ரெங்கஸ்வாமிஐயரவர்களால்

திருத்தப்பெற்று விரிவானதோர் அவதாரிகையுடன்

இரண்டாம் பதிப்பாகப்

பிரசுரிக்கலாயிற்று.



Madras
A. Rangaswami Ayyar

எலெக்ட்ரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது, கோயமுத்தூர்.

1924.

[விலை அணா 12.

பவப த

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

# யோகசூத்திரம்.

## முகவுரை.

பதஞ்சலி மஹா முனிவர், சரீர சுத்தி செய்து, அதனால் சுப வித்தி பெறுதலுக்கு அநுகூலமாக வைத்திய சாஸ்திரத்தையும்; வாக்கு சுத்தி செய்து, அதனால் சப்தப்பிரம்ம உபாஸனா பலம் அடையும்படி அநுஷ்டிப்பதற்கு, பாணினி வியாகரண சூத்திரங்களுக்குப் பெயர்போன மஹா பாஷ்யத்தையும்; மனத்தைச் சுத்தி செய்து, கைவல்லியம் பெறுவதற்கு அநுகூலமாக இந்த யோக சாஸ்திரத்தையும், மனிதர்களின் மேல் உள்ள காருண்யத்தினால் அருளிச்செய்தார். அவர் இன்ன தேசத்தில் இன்ன காலத்தில் அவதரித்தாரென்பது, வியக்தமாகத் தெரியவில்லை. ஆனால், இற்றைக்கு 2,300 வருஷங்களுக்கு முன்னர் காச்மீரத்தில் இருந்திருக்க வேண்டுமென்று சில வித்வான்களின் அபிப்பிராயம். இவரை ஆதிசேஷ அவதாரமாகச் சொல்வதுண்டு. அதிக புத்தி கூடிய நாவலர்களை, இரண்டாயிரம் நாக்குடைய ஆதிசேஷ அவதாரமாக அலங்கார பாஷையில் சொல்வது நம்மவர்களின் வழக்கமே.

இந்த யோக சாஸ்திரம் நான்கு பாதங்களாக நடைபெறுகிறது:—(1) சமாதி பாதம், (2) ஸாதந பாதம், (3) விபூதி பாதம், (4) கைவல்ய பாதம் என்பனவாம்.

இந்த யோக சாஸ்திரத்துக்கு பாஷ்யம் செய்தவர், வியாசர். இவர் பகவான் ஸ்ரீ வேதவியாஸர் எனச்சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். மற்றும் சிலர், இவர் வேறொரு ரிஷியானவர் என்றும், வேதவியாஸரல்லர் என்றும் சொல்லுகிறார்கள். இவ்வியாஸ பாஷ்யத்திற்கு வாசஸ்பதி மிச்ரர் “தத்வ வைசாரதி” என்னும் விரிவான வியாக்கியானம் செய்திருக்கிறார். மேலும், விஞ்ஞானபிக்ஷு என்பவர் “யோகவார்த்திகம்” என்னும் வார்த்திகமும் எழுதியுள்ளார். ஸ்ரீ போஜராஜர் என்பவர், யோக சூத்திரங்களுக்கு “ராஜமார்த்தாண்டம்” என்னும் ஓர் விருத்தியையும் செய்திருக்கிறார்.

யோக சாஸ்திரத்தின் முக்கிய தாத்பரிய மென்னவென்றால்: யோகத்தின் ஸ்வரூபம், அதன் ஸாதனம், அதன் விபூதிகள், சித்திகள் அதன் பலனாக கைவல்யமாம். இவ்விஷயங்களில் யோக சாஸ்திரத்திற்கும், உபநிஷத்துக்களுக்கும், ஒன்றொரு விரோதமுமில்லை. உபநிஷத்துக்களின் பரமதத்துவங்களை ஸாக்ஷாத்கரிப்பதற்கு யோக சாஸ்திரம் பரமஸாதகமானது. ஸேச்வர ஸாங்கிய சாஸ்திரத்தின் சித்தாந்தத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு யோக சாஸ்திரம் ஏற்பட்டிருக்கின்றமையாலும், அச்சாங்கியத்திற்கும் உபநிஷத்துக்களுக்கும் முக்கிய விஷயங்களில் வேற்றுமை இல்லாமையாலும், யோக சாஸ்திரத்திற்கும் உபநிஷத்துக்களுக்கும் முக்கிய விஷயங்களில் விரோதமில்லையெனல் அறியத்தக்கது.

இம்மொழி பெயர்ப்பு வியாச பாஷ்யத்தை அநேக இடங்களில் அநுசரித்து நடைபெறுகிறது. அந்த பாஷ்யத்தினின்றும், மற்றவ்யாக்கியானங்களினின்றும் சில முக்கியமான விஷயங்கள் குறிப்பாய், சுருக்கமாய் எழுதப்பட்டுள்ளன.

மொழிபெயர்ப்பு ஆசிரியர்.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

# யோக சூத்திரம்.

## 1-வது. சமாதிபாதம்.

---

† [illegible]
[illegible]
[illegible]
[illegible]

(இதன் பொருள்) வாக்கு, காயம், மனம் இவைகளின் மலங்களைப்போக் கடிக்கும்படியாக முறையே சப்தசாஸ்திரத்தையும், வைத்திய சாஸ்திரத்தையும், யோகசாஸ்திரத்தையும் ஜன உபகாரமாக அருளிய முனிசிரேஷ்டரான பகவான் பதஞ்சலியாரைக் கைகூப்பி வணங்குகிறேன்.

### சூத்திரங்கள்.

1. [illegible]

யோகசாஸ்திரம் பூர்வமுறையின் சார்பாய் ஆரம்பிக்கப்படுகிறது.

குறிப்பு :—ஆதியில் சாங்கியத்திற்குக் கபிலமுனியும், வேதாந்தத்திற்கு வியாசபகவானும் இருக்கின்றமைபோல, யோக சாஸ்திரத்திற்கு ஆதி கர்த்தர் ஹிரண்ய கர்ப்பராவர். பதஞ்சலியார் முன்னுள்ள சாஸ்திரத்தை அநுசரித்துப் பிரகிருத நூலைச் செய்திருக்கின்றமையால் சூத்திரத்தில் "அநுசாஸனம்" என்ற பதம் உபயோகிக்கப்பட்டிருக்கின்றது.

யோகம் என்றால் சமாதி என்பது பொருள், அல்லது சேர்தல் என்றும் பொருள் கொள்ளலாம். ஜீவாத்மா பரமாத்மாவினுடன் ஒன்று படுதலாம். முன்னது தான் இந்நூலாசிரியரின் கருத்து. யோக சாஸ்திரத்தின் பிரயோஜனம் பிரகிருதிக்குட்பட்ட ஆன்மாவைக் கைவல்யம் பெறும்படி செய்தல். பந்தத்திற்குட்பட்டவன் பந்த விமோசனம் பெறுதலுக்குச் சாதனமான நூல்.

சித்தமானது ஐந்து பூமிகள் அல்லது படிகளை உடையது.

(1) க்ஷிப்தம்=சஞ்சலமான நிலைமை.

(2) மூடம்=ஒன்றுமறியாத நிலைமை.

(3) விக்ஷிப்தம்=சொற்பகாலம் சஞ்சலமின்மையும், பெருகாலம் சஞ்சல முண்மையும் இருக்கின்ற நிலைமை.

---

† இது வேறொரு இடத்தினின்று எடுக்கப்பட்டது.

(4) ஏகாக்கிரம்—ஒரே வஸ்துவை அவலம்பித்திருக்கின்ற நிலைமை.

(5) நிருத்தம்—விருத்தி சூந்நியமான நிலைமை, ஆனால் விருத்தி பீஜமாகிய சம்ஸ்காரமாத்திரம் உள்ள நிலைமை.

முதல் மூன்று படிகளில் யோகப்பிரவேசம் முடியாது. நான்காம், ஐந்தாம் படிகளில் கூடும்.

2. [illegible] ॥

யோகம் என்பது சித்தவிருத்திகளை நிரோதம் செய்தலாம்.

குறிப்பு 1 :—இந்த சூத்திரத்தால் நிருத்தம் என்ற நிலையான அஸம்பிரஞ்ஞாத சமாதி என்பது மாத்திரந்தான் யோகம் எனப்பொருள்படும். ஆனால் எல்லாச் சித்தவிருத்திகள் என்று சூத்திரத்தில் சொல்லாமையால், கீழான படிகளான க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம் இவைகளை நீக்கி ஏகாக்கிரம், நிருத்தம் என்ற இரண்டு படிகளும் யோகப்பயிற்சிக்கு உரியதாகும். சித்தம் என்பது சத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களுடன் கூடி நிகழ்வது. சத்வ குணமானது எப்போதும் அதனிடம் உள்ளது. சித்தம், ரஜஸ், தமஸ் இவைகளுடன் சம்பந்திக்கும்போது ஐசுவரியங்களிலும் விஷயங்களிலும் பற்றுதல் உண்டாகின்றது. தமஸ் மேலிட்டால், அதர்மம், அஞ்ஞானம், வைராக்கியமின்மை, ஐசுவரியமின்மை மனத்திற்கு ஏற்படும். தமஸ் மறைந்து ரஜஸ் கொஞ்சமிருந்தால் மேற்படி பாவங்களின் எதிர்மறையான நிலைமை உண்டாகிறது. ரஜஸ் அற்பமேனும் இல்லாமல் போய்த்துப் போமாகில், புருஷ ஸ்வரூபத்தில் பிரதிஷ்டை உண்டாகிறது. இந்நிலையானது தர்மமேகத் தியானத்திற்குப் போதுமளவுக்கு அனுகூலமாயுள்ளது. தர்மமேக சமாதி வரையிலுள்ள சமாதியின் பல படிகள் ஸம்பிரஞ்ஞாத சமாதியில் அடங்கும். தர்மமேகசமாதியை பரம் பிரஸங்கியானம் என்று சொல்வதுமுண்டு. தர்மமேக சமாதியை பற்றிப் பின்னர் விவரிப்போம்.

குறிப்பு 2 :—ஸம்ஸ்கார மாத்திரம் மிகுந்திருந்து விருத்திகள் ஒழிவடையும் போது, அந்நிலை அஸம்பிரஞ்ஞாத சமாதியாம். யோகம் ஸம் பிரஞ்ஞாத சமாதியென்றும் அஸம் பிரஞ்ஞாத சமாதியென்றும் இருவகைத்தாம். இவ்விரண்டும் முறையே ஸபீஜம் என்றும் நிர்பீஜம் என்றும் பெயர் பெறும்.

3. [illegible] ॥

அப்போது (விர்த்திகள் அடங்கும்போது) புருஷன் தன் ஸ்வரூபத்தில் இருப்பான்.

குறிப்பு :—விர்த்திகள் அடங்கினால் விஷயம் ஒன்றுமில்லை. அச்சமயத்தில் கேவலம் தன்னிலையில் நிரோதாவஸ்தையையடைந்த புருஷன் இருப்பான். அது கைவல்லிய ஸ்திதியைப்போன்றதாம்.

4. [illegible] ॥

ஏனையகாலத்தில் (விர்த்திகள் அடங்காமல் இருக்கின்ற காலத்தில்) அதே புருஷன், நிகழும் அந்தந்த விர்த்தியுடன், ஸம்பந்தித்திருப்பான் ; விர்த்தி சுவரூபத்தையடைகிறன்.

5. வ்ருத்தய: பஞ்சதய்ய: க்லிஷ்டாக்லிஷ்டா:॥

விர்த்திகள் ஐவகை. சில துக்ககரமானவை. சில துக்கமின்மையானவை.

6. ப்ரமாணவிபர்யயவிகல்பநித்ராஸ்ம்ருதய:॥

பிரமாணம், விபரியயம், விகற்பம், நித்திரை, ஸ்மரணை என்பன ஐவகை விர்த்திகளாம்.

7. ப்ரத்யக்ஷாநுமாநாகமா: ப்ரமாணாநி॥

பிரத்தியக்ஷம், அநுமானம், ஆகமம் என்பன பிரமாணங்கள்.

குறிப்பு 1:— உபமானம், அருத்தாபத்தி, அனுபலப்தி. இம்மூன்றையும் சேர்த்து சிலர் ஆறு பிரமாணங்கள் உண்டென்பார்கள். ஆனால் இவை மூன்றும் அநுமானத்தில் அடங்கும். ஆகமம்=ஆப்த வாக்கியம், சப்தம், சர்வஞ்ஞனுகவும் கருணையுள்ளவனுகவுமிருக்கின்ற புருஷனின் வாக்கியம்.

குறிப்பு 2:— இம்மூன்று பிரமாணங்களினும், தாரதம்மியமுண்டு. சாதாரண மனிதன் பிரத்தியக்ஷத்தையும், அறிவில் மிகுந்தவன் பிரத்தியக்ஷம் அநுமானத்தையும், இன்னும் விசால அறிஞன் சப்தத்தையும் பிரமாணமாகக் கொள்ளுவான். எல்லாப் பிரமாணங்களும், ஆத்மஸம்வித் பெறும் வரையில் பயனுள்ளவை. ஆத்மஸம்வித் அடைந்த மஹா புருஷனுக்குத் தன்னுடைய சாக்ஷாத்காரமேயன்றி, மற்றவை பிரமாணமன்று. அந்த உயர்நிலை பெறுவதற்கே, பிரமாணங்கள் படிகளாம், சாதனங்களாம்,

8. விபர்யயோ மித்யாஜ்ஞாநமதத்ரூபப்ரதிஷ்டம்॥

விபரியயம் என்பது ஒரு வஸ்துவிற்குரிய ஸ்வரூபம் தோன்றாமல் பொய்யான வேறொரு ஸ்வரூபம் தோன்றலாம்.

குறிப்பு:— சந்தேகம் என்பது விபரியயத்தில் சேர்ந்ததாக சூத்திரக்காரர் அபிப்பிராயம். அதனால் அதைப்பற்றி வேறாகச் சொல்லவில்லை.

9. சப்தஜ்ஞாநாநுபாதீ வஸ்துசூந்யோ விகல்ப:॥

விகற்பம் என்பது வஸ்து உண்மையில் இன்றி, வார்த்தையை மாத்திரம் அநுசரித்து உண்டாகும் மனோவிர்த்தியாம்.

குறிப்பு:— முயற்கொம்பு, வந்தியா புத்திரன், சைதன்னியம் (அறிவு) புருஷனுடைய ஸ்வரூபம், (இதில் சைதந்நியம், புருஷன் என்ற இரண்டு வார்த்தைகளினால் வித்தியாசமிருப்பினும், அவைகள் குறிக்கும் பொருள் ஒன்றே, இரண்டல்ல). ராகுவின் தலை இவை போன்றவை உதாரணமாகும்.

**10.** அபாவப்ரத்யயாலம்பநா வ்ருத்திர்நித்ரா ॥

நித்திரை என்பது உள்ளும் வெளியும் விஷய பிரஜ்ஞை இல்லாத மனோ விர்த்தியாம்.

*குறிப்பு:—சதாரண ஜனங்களின் அபிப்பிராயத்தில், நித்திரையில் விர்த்தி சூன்யமாம். தூங்கி விழித்தபின்பேல், 'சுகமாய்த் தூங்கினேன்' என்ற ஸ்மரணை இருக்கின்றமையால், உண்மையில் அது தூக்கத்தில் அபாவரூபமான ஒரு விர்த்தியாக இருக்கின்றது.*

**11.** அநுபூதவிஷயாஸம்ப்ரமோஷ: ஸ்ம்ருதி: ॥

ஸ்மிருதி என்பது அனுபவித்த விஷயம் மனத்தைவிட்டு நழுவாமலிருத்தலாம்.

*குறிப்பு:—பிரமாணம் முதலிய இவ்வைந்து விர்த்திகளும் சுகம், துக்கம், மோகம் இவைகளுக்குட்பட்டவை. இவ்விர்த்திகளில், பிரமாணம், விபரியயம், விகற்பம் இவை மூன்றும் ஜாக்கிரதாவஸ்தையில் அனுபவிக்கப்படுகின்றன. இம்மூன்று விர்த்திகளும் வால்தவமின்றி ஸ்வப்னாவஸ்தையில் அனுபவிக்கப்படுகின்றன. ஸுஷுப்தி அவஸ்தையில் நித்திரை மாத்திரம் உள்ளது. ஸ்மிருதி மற்றைய இரண்டு அவஸ்தைகளிலும் உள்ளது; நித்திரையில் இன்றும்*

**12.** அப்யாஸவைராக்யாப்யாம் தந்நிரோத: ॥

அப்பியாசம், வைராக்கியம் (என்ற உபாயங்களால்) விருத்திகளின் நிரோதம் உண்டாகின்றது.

*குறிப்பு:—மனோவிர்த்திகளாகிற பிரவாகமானது, சத்வம் மேலிட்டிருந்தால், நல்ல மார்க்கத்திலும், ரஜஸ், தமஸ்கள் மேலிட்டிருந்தால், தீய மார்க்கத்திலும் செல்லுகின்றது. நல்ல மார்க்கம் என்பது அந்தர்முகமாய்க் கைவல்யத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பிக்கும். தீய மார்க்கமானது விஷய நுகர்ச்சி என்ற ஸம்ஸாரத்திற்குக் கொண்டுபோய் விடும். வைராக்கிய ஸாதனத்தால், விஷயப் பிரவாகத்தைத் தடுத்து அணை போட்டும், அப்பியாச சாதனத்தால், நல்ல மார்க்கம் என்றதனை வெட்டிவிட்டும், அதில் மனோவிர்த்திகளைச்செல்லும்படி செய்தலுமாம். வைராக்கியம், பிரதிபந்தமாகிய அனிஷ்ட நிவிர்த்தியையும், அப்பியாசம் இஷ்டப் பிராப்தியையும் தரும்.*

**13.** தத்ர ஸ்திதௌ யத்நோऽப்யாஸ: ॥

இப்பிரகரணத்தில் மனத்தை ஸ்திரமாக நிறுத்தலின் முயற்சி அப்பியாசமாம்.

*குறிப்பு:—பகிர்முகமாகிய விர்த்திகள் போய் அந்தர்முகமான விர்த்திகள் நடைபெறல் ஸ்திதி எனப்படும். அந்நிலையை அடைவதற்காக, பாஹ்யாந்தர சாதனங்களை அனுஷ்டித்தல் அப்பியாசமாம்.*

**14.** ஸ து தீர்க்ககாலநைரந்தர்யஸத்காரா-
ஸேவிதோ த்ருடபூமி: ॥

நீண்டகாலம் இடையறாமல் ஏற்பட்ட சாதனங்களுடன் அவ்வப்பியாசம் செழுமாகில், அது திடமானதாகும்.

குறிப்பு :— சாதனங்களாவன :— தபஸ், பிரம்மசரியம், வித்தை, சிரத்தையாம்.

15. த்ருஷ்டாநுச்ரவிக விஷயவித்ருஷ்ணஸ்ய
வசீகாரஸம்ஜ்ஞா வைராக்யம் ॥

வைராக்கியம் என்பது, பிரத்தியக்ஷ, (சாஸ்திரங்களில் பிரஸ்தாபித்திருக்கிற) அப்பிரத்தியக்ஷ விஷயங்களில் அவாவின்றி யிருப்பவன் தன் இந்திரிய மனங்களை அடக்குதலாம்.

* குறிப்பு :— வேண்டுதல், வேண்டாமை, இல்லாதிலாமை, வைராக்கியம். அது நாலுபடியுள்ளது. (1) யதமாநம்—முயற்சி. மனம் இந்திரிய விஷயங்களிற் செல்லாமல், தடுத்தலின் முயற்சி முதற்படி. (2) வியதிரேகம்— அம்முயற்சி செய்கிறதில், சில விஷயங்களைப்பற்றி விருப்பு வெறுப்பில்லாமல் அவ்விஷயங்கள் முன்னரே தள்ளப்பட்டவைகளாகின்றன. அஃதாவது அவைகள் சம்பந்தமாக வைராக்கியம் பக்குவமாகியிருக்கிறது, சில நம்மை இழுக்கின்றன; அவை நம்மை இழுக்காமல் தடுக்க முயலுகின்றோம். இவைகளைப்பற்றிய வைராக்கியம் பக்குவமாகிக் கொண்டு வருகின்றது. சில நம்மை இழுக்கின்றன. ஆனால் அவைகளைத் தடுக்க எவ்விதமுயற்சியும் செய்யநாம் ஆரம்பிக்கவில்லை, இவைகளைப்பற்றி வைராக்கியம் ஏற்பட்டு, இனி பக்குவமாகவேண்டும். இவ்விதமாக விஷயங்களின் இழுப்பின் தாரதம்மியம் அறிதல் இரண்டாம்படி. (3) ஏகேந்திரியம்—பக்குவமானவைகளில், இந்திரியங்கள் சலிக்காமல் இருக்க, மனம் மாத்திரம், விஷயங்களில் ஒரு விருப்பு அல்லது வெறுப்பைக் கொள்ளுதல். மனமாகிற ஒரு இந்திரியத்தின் தொழில் இருக்கின்றமையால் ஏகேந்திரியம் என்பது மூன்றாம்படி. (4) வசீகாரம்—விஷயங்கள் தாமே ஒழிவை அடைகின்றன. இந்திரியங்கள் சலிக்கவில்லை, மனத்தினிடத்திலுள்ள விருப்பு, வெறுப்பு என்றவையும் அற்றுப்போதல், அதனால் சுதந்தரம் ஏற்படும். நாம் விஷயங்களின் வசமாகாமல், அவைகளை வசமாக்கிக் கொள்ளல். இது நான்காம்படி. புருஷ தர்சனம் நிகழ்வதினால் இஃது உண்டாகும். கீதை 2-ம் அத்தியாயம் 59-ம் சுலோகம் இங்கு கவனிக்கத்தக்கது.

16. தத்பரம் புருஷக்யாதேர் குணவைத்ருஷ்ண்யம் ॥

பரம வைராக்கியம் என்பது, புருஷ தர்சனம் நிகழ்வதினால் (சத்வ, ரஜஸ், தமஸ் என்ற) குணங்களினும் பற்றில்லாத நிலையாம்.

* குறிப்பு :—சாதாரண வைராக்கியம், காரியங்களான விஷயங்களில் பற்றில்லாமை. காரணங்களான குணங்களில், பற்றில்லாமை பரம வைராக்கியம். முன்னது அபர வைராக்கியம் என்றும் பின்னது பர வைராக்கியம் என்றும் பெயர் பெறும். முன்னது ஸத்வகுணம் மேலிட்டு ரஜோகுணம் சம்பந்தமுடையதாய் தமஸ் அற்றுப்போயிருக்கின்ற நிலை. இதில் ஸித்திகள் அடையலாம். சுவர்க்கம், விதேகிகளின் நிலைமை, பிரகிருதி லயம் முதலியவை பெறலாம். பின்னதான பர வைராக்கியம் பெற்ற யோகி மோக்ஷ அநுபவங்கள் அடைய அருகனாயிருந்தும், அவைகளை அலக்ஷியம் செய்து, புருஷ தர்சன நோக்கமுள்ளவனாக, புருஷனை சாக்ஷாத்கரிக்கிறான்.

17 விதர்க்கவிசாரானந்தாஸ்மிதாரூபா-
நுகமாத் ஸம்ப்ரஜ்ஞாத:॥

ஸம்பிரஜ்ஞாத ஸமாதி என்பது விதர்க்கம், விசாரம், ஆநந்தம், அஸ்மிதை என (நால் வகை) ரூபத்தை அனுசரித்து நிகழ்வதாகும்.

குறிப்பு:— சாதனங்களைச் சொல்லி, பின்னர் சாத்தியம், அதாவது அடையப்படும் ஸமாதிகளைச் சொல்லுகின்றார். ஸமாதி இருவிதம். முதற்படி ஸம்பிரஜ்ஞாத ஸமாதி, இரண்டாம்படி அஸம்பிரஜ்ஞாத ஸமாதி. ஸம்பிரஜ்ஞாத ஸமாதி நான்கு உட்பிரிவுகளை யுடையது. யோகியானவன் ஸ்தூலவஸ்துவை முதன்மையில் தியானம் செய்து (விதர்க்கம்), பின்பு அதன் சூக்ஷ்ம நிலையான தன்மாத்திரைகளைத் தியானம் செய்கிறான் (விசாரம்). இது, வில்வித்தையில் பழகுவோன், முதலில் ஸ்தூல லக்ஷியத்தையும், பின்பு சூக்ஷ்ம லக்ஷியத்தையும் வைத்துப் பழகுவது போன்றதாகும்.

(1) ஸ்தூலவஸ்து தியாகம்— விதர்க்கம்

(2) சூக்ஷ்மவஸ்து தியாகம்— விசாரம்.

(3) இந்திரியங்கள் ஸ்தூல வஸ்துக்களில் செல்லாமல் அதனதன் ஸ்தானத்தில் நிற்கும்படி செய்தலினால் உண்டாகும் அனுபவம்— ஆனந்தம்.

(4) வேறு ஒன்றும் மனத்தில் வராமல் பிரயத்தனத்தால் தடுத்து நான் என்ற பிரஜ்ஞைமட்டும் இருப்பது அஸ்மிதை. விசாரம், ஆனந்தம், அஸ்மிதை, இம்மூன்றும் விதர்க்கத்தில் இருக்கின்றன. ஆனந்தம், அஸ்மிதை, இவ்விரண்டும் விசாரத்தி லிருக்கின்றன, அஸ்மிதை மாத்திரம் ஆனந்தத்தில் இருக்கின்றது. மேற்கண்ட விஷயங்களையே அடியில் வருமாறு சொல்லலாம்.

(1) முதற்படியில் ஸ்தூல விஷயங்களில் ஒன்றை லக்ஷியம் வைத்து தியானம் செய்தல்— விதர்க்கம்.

(2) இரண்டாம்படியில் சூக்ஷ்மமான விஷயங்களில் யாதேனும் ஒன்றை லக்ஷியம் செய்து தியானம் நிகழும். பஞ்ச தன்மாத்திரை, அகங்காரம், மஹத்தத்துவம், அவிம்லை, சாந்தம் முதலியவைகளில் ஒன்றின்மேல் தியானிப்பது— விசாரம்.

(3) மூன்றாம்படியில், ஸ்தூல சூக்ஷ்ம விஷயங்கள் இல்லாமல், மனது முதலிய ஆறு இந்திரியங்களை அதனதன் ஸ்தானத்தில் நிறுத்தி, அந்நிலையில் தியானம் பண்ணுவது ஆனந்தம்.

(4) நான்காம் படியில், இந்திரியங்களையும் விட்டு நான் என்ற பாவம் தனித்திருத்தல் அஸ்மிதை.

இம்முறையில் மனத்திற்கு யாதேனும் ஒரு ஆலம்பநம் (பிடிப்பு) உள்ளது. ஆதலால் இந்த ஸமாதிக்கு ஸம்பிரஜ்ஞாத ஸமாதி எனப் பெயர்.

18. விராமப்ரத்யயாப்யாஸபூர்வ:
ஸம்ஸ்காரசேஷோऽந்ய: ॥

ஓய்வும் ஞாபகபிரக்ஞையும் யத்தினமும் முதிர்ந்து கரும வாசனைமட்டும் பாக்கி நிற்கும் நிலை வேறு (அசம்பிரக்ஞாத) சமாதியாகும்.

குறிப்பு:—இம்முறையின் அப்பியாஸம் ஸ்திரமானபிறகு, ஒருவித ஆலம்பனமுமின்றி மனம் தனித்திருத்தல் ஏற்படும். ஆனால் ஸம்ஸ்கார சேஷம், இச்சமாதி கொழுங்கால், இருக்கும். இச்சேஷமும் இச்சமாதி ஸ்திரப்படுமாகில் ஒழியும். இந்நிலையைத் திருமூலர் அடியில் வருமாறு சொல்லாநிற்கிறார்.

நானென்றுந் தானென்று நாடினன் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
நானென்று நானென்றுஞ் சாற்றகிலேனே.—திருமந்திரம்.

இது எல்லா விர்த்திகளும் ஓய்ந்த நிலை. திரிபுடி அற்ற படி. ஆனால் இது ஸுஷுப்தியின் லயம் அன்று. பிரக்ஞை மாத்திரம் இருக்கும். அலைஅற்ற கடல் போன்ற நிலை இது. "திரை பொரா மன்னும் அமிர்தத் தெண் கடலே" என்ற மாணிக்கவாசகர் அனுபவ வாக்கு இங்கு கவனிக்கத்தக்கது. ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் நீங்கப்பெற்று, சுத்த ஸத்வ குணஸ்வரூபமாகவே ஆகின்ற நிலை இதுவாம். பரவைராக்கியம் இவ்வுயர்நிலைக்குச் சாதனமாம்.

மனத்தின் ஏகாக்கிர நிலையில் ஸம்பிரக்ஞாத சமாதி ஏற்படக் கூடியது. மனத்தின் நிருத்த நிலையில், அஸம்பிரக்ஞாத சமாதி ஏற்படக்கூடியது. ஆதலால் அஸம்பிரக்ஞாத சமாதி, நிரோத சமாதி என்றும் பெயர் பெறும்.

19. பவப்ரத்யயோ விதேஹப்ரக்ருதிலயாநாம் ॥

ஸமாதியில் சிருஷ்டித்தோற்றம், தேஹத்தை நீக்கி மூலப்பிரகிருதியில் லயமடைந்த யோகிகளுக்கு உண்டு.

குறிப்பு:—அஸம்பிரக்ஞாத சமாதி பவப்பிரத்தியயம், உபாயப்பிரத்தியயம் என இருபடிகள் உடையது.

பவப்பிரத்தியயம், அவித்தையைக்காரணமாக உடையது. அதாவது அவித்தையின் சம்பந்தமுடையது. இந்நிலையில் அவித்தை என்ற ஆவரணம் உள்ளது. பல புவனங்களின் போகங்களை அனுபவிக்கவேண்டுமென்ற இச்சை யோகியைப் பற்றி நிற்கும். வைதேகிய நிலையும் இதில் அடங்கும். இவ்வித அனுபவங்களுக்குக் காலவரம்பு உண்டு. "இந்திரியங்களை உபாஸிக்கிறவர்கள், 10 மன்வந்தரங்கள் லோகாந்தரங்களில் வசிப்பார்கள் என்றும், பூதங்களை உபாஸிக்கிறவர்கள் 100 மன்வந்தரங்கள் லோகாந்தரங்களிலும், அகங்காரத்தை உபாஸிக்கிறவர்கள் 1000 மன்வந்தரங்கள் லோகாந்தரங்களிலும் வசிப்பார்க"ளென்றும் வாயுபுராணத்தில் சொல்லியிருக்கிறது.

பிரகிருதிலீனர்கள் அவ்யக்தம், மகத் முதலியவைகளை உபாஸிக்கிறவர்கள். அதாவது அதுவும் தானும் ஒன்றுதான் என்று உபாஸிக்கிறவர்கள். சரீரம் போனபிறகு உபாஸியமான வஸ்துவுடன் லயத்தை அடைகிறார்கள்.

"யதாக்ரதுரஸ்மிம்ல்லோகே புருஷோ பவதி ததேத: ப்ரேத்ய பவதி" — சாந்தோக்கிய உபநிஷத்.

(இதன் பொருள்) புருஷன் எந்த சங்கல்பத்துடன் மரணமடைகிறானோ, அந்த சங்கல்பரூபமாக லோகாந்தரத்தில் ஆகிறான்.

"யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா தத்பாவபாவித: ॥"

பகவத்கீதை.

(இதன் பொருள்.) "கௌந்தேய (ஒருவன் தனது வாழ்வின்) முடிவிலே எந்தெந்தப் பொருளை நினைந்து சரீரத்தை விடுகின்றானோ, அதனைப் பற்றிய பாவனையால் எப்பொழுதும் பாவித்த (நிர்மாணம் செய்யப்பட்ட) வனாய் அதையே அடைகிறான்.

இவர்களுக்கு நீடித்த சுகமிருந்தாலும் அதற்கு முடிவு உண்டு; புனர்ஜன்மம் உண்டு. தவளைகளின் கருக்கள் மழையில்லாத காலத்தில் மண்ணோடு கலந்து அந்தர்கதமாக இருக்கின்றன. அவைபோல, இப்பிரகிருதிலீனர்கள் அவ்யக்தத்தில் லயமடைகிறார்கள். பின்பு தவளைக் கருக்கள் மழைக்காலத்தில் உண்டாகுமாறு போல, இப்பிரகிருதிலீனவர்கள் சரீரம் பெறுகிறார்கள். அவர்களுக்கு அந்த லய காலத்தில் அந்த லயம் கைவல்யத்திற்குச் சமமானதாகத் தோன்றும்; ஆனால், அது கைவல்யமன்று.

உபாயப்பிரத்தியயம்:—புருஷ ஸாக்ஷாத்காரத்தை உண்டுபண்ணுதல் மனத்தின் பிரயோஜனம். மேற்கண்ட பிரகிருதியை அநுபவங்களில் பற்றில்லாமல், மனம் மேல் நோக்கி, புருஷ தர்சனம் பெறுமாகில், அதுவே கைவல்ய ஸித்தி. இதுதான் உபாயப்பிரத்தியயம். மனத்தை நான் என்று உபாஸிக்கிறவர்கள், 10,000 மன்வந்தரங்கள் லோகாந்தரங்களில் வசிப்பார்கள் என்றும், அவ்யக்தத்தை உபாஸிப்பவர்கள் 1,00,000 மன்வந்தரங்கள் லோகாந்தரங்களில் வசிப்பார்கள் என்றும், புருஷ தர்சனம் அடைகிறவர்கள் காலவரம்பைத் தாண்டுகிறார்கள் என்றும், வாயு புராணத்தில் சொல்லியிருக்கின்றன.

20 ஶ்ரத்தாவீர்யஸ்ம்ருதிஸமாதி
ப்ரஜ்ஞாபூர்வக இதரேஷாம் ॥

தேகத்தை விட்டு பிரகிருதியில் லயமடையாத மற்ற யோகிகளுக்கு அதாவது உபாயப்பிரத்தியயத்தைக் கைக்கொண்டவர்களுக்கு சிரத்தை, வீரியம், ஸ்மிருதி, ஸமாதி பிரக்ஞை என்ற உபாயங்கள் மூலம் (புருஷனிடத்தில் தோற்றம் உண்டாகும்.)

குறிப்பு:— சிரத்தை என்பது இங்கு, உயர்வமைந்த லக்ஷியமான கைவல்ய விஷயத்தை நோக்கிய மனத்தின் தெளிவும், அதனால் மனத்தின் விசேஷ முயற்சியுமாம். புத்தி மேன்மேலும் தெளிவு பெற, வீரியம், அதாவது மன எழுச்சி, மன உத்ஸாகம் ஏற்படும்.

ஸ்மிருதி:— அந்த உயர்வுள்ள லக்ஷியம் மனத்தில் தோன்றவே, அதை இடையறாது நினைத்தல், தியானித்தல்.

ஸமாதி: அப்படி நினைத்தலால் மனம் ஏகாக்ரியம் கொள்ளும், மனச் சலனமின்மை உண்டாம்.

பிரஞ்ஞை:— அம்ம ஸமாதி பெறவே யதார்த்தமான ஞானம், மெய்யுணர்வு உண்டாகும்.

இவைகளில் முன்னது, பின்னது உண்டாவதற்கு அநுகூலமாம்.

**21.** தீவ்ரஸம்வேகாநாமாஸந்ந: ॥

**தீவிரமான நல்ல வேகமுள்ளவர்களுக்கு, ஸமாதி நிலை ஸமீபமாயுள்ளது.**

குறிப்பு:— யோகிகள் 9 வித படிகளில் உள்ளவர்கள். உபாயங்கள், வைராக்கியங்கள் இவைகளின் தாரதம்மியங்களினால் அப்படிகள் ஏற்படுகின்றன. உபாயம் மூன்று விதம் — மிருது, மத்தியமம், அதிமாத்திரம்; வைராக்கியமும் மூன்று விதம். அதிமாத்திரமான உபாயம், அதிமாத்திரமான வைராக்கியம் இவ்விரண்டும் கூடிய யோகிகளுக்கு, இச்சூத்திரத்திற் சொல்லிய பிரகாரம், ஸமாதி ஸமீபத்திலுள்ளது. அதாவது ஸமாதி லாபம், ஸமாதி பலம் உண்டாகிறது.

சிரத்தை முதலிய உபாயங்களை அப்பியஸித்தாலும், ஸமாதி லாபம், ஏன் எல்லோரும் அடையவில்லை என்றால், மேற்கண்ட வீரியம், சிரத்தை முதலியவைகள் பல படிகளாக இருக்கின்றன. அப்படிகளில் நின்றுள்ள யோகிகள் பல திறத்தாராக இருக்கிறார்கள். ஆகையால் உபாயம், வைராக்கியம் பல தாரதம்மியங்களை உடையன, அத் தாரதம்மியங்களுக்குக் காரணம், பூர்வ ஜன்மங்களில் ஏற்பட்ட ஸம்ஸ்கார விசேஷங்களாம். ஸம்பிரஞ்ஞாத ஸமாதியின் பலன் அஸம்பிரஞ்ஞாத ஸமாதியாம். அஸம்பிரஞ்ஞாத ஸமாதியின் பலன் கைவல்லியமாம்.

**22.** ம்ருதுமத்யாதிமாத்ரத்வாத்ததோऽபி விசேஷ: ॥

மேலும் அத்தீவிரமானது மூன்று படிகள் உடையது, மிருது, மத்தியமம், அதிமாத்திரம் அவைகளில் பின்னது முன்னதைவிட விசேஷமாம்.

**23.** ஈச்வரப்ரணிதாநாத்வா ॥

**ஈசுவரபக்திவிசேஷத்தினாலாவது.**

குறிப்பு:— முன் 20-ம் சூத்திரத்தில் கண்ட உபாயங்களைத் தவிர, பின் வரும் சூத்திரங்களில் பிரஸ்தாபிக்கப்படும் இன்னும் பல உபாயங்களால் ஸமாதி நிலையைப்பெறலாம் என்பதைச் சொல்லுகிறார். இச்சூத்திரத்தில் ஈசுவரப் பிரணி

வீம் ஸ்வீகரித்துக்கொள்ளுகிறார். அந்த சுத்த மனத்தில், இச்சை ஞானம், கிரியை என்ற சக்திகள் அனைவருக்குமே அமைகின்றன. ஈசுவரன் இத்தன்மையான மனத்தை ஸ்வீகரித்துக் கொண்டால், மனிதர்களைப்போல அவித்தையாலன்று. அதனால் இம்மனத்தில் மனிதர்களைப்போல ஸ்வாமி, ஸ்வாமித்துவம் இல்லை. ஜனங்களின் மேலுள்ள பரம கருணையால், தாபத்திரயத்தினின்று அவர்களைக் கரையேற்றும் பொருட்டு, ஞான, தர்ம உபதேசத்திற்காக, தாமே சுத்த சத்துவமான மனத்தை ஏற்படுத்திக்கொள்ளுகிறார். சாதாரண மனிதன் அவித்யைக்கு வசமாகிறான். ஈசுவரன், அவித்யையின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டு அவித்யையின் கார்யமான மேலே சொன்ன பதார்த்தம், அப்போதைக்கப்போது ஸ்வீகரித்துக்கொள்ளுகிறார். இராமனின் வேஷம் பூண்ட ஒருவன், இராமனாக நடித்தாலும், அந்தக் காலத்திலும், உண்மையில் தான் இராமன் அல்லன் எனத் தெரிந்திருப்பான் போல, ஈசுவரன் தாமே சில தேகங்களை வருவித்துக்கொள்ளுகிறார். அவைகள் அவருடைய பரதந்திரமன்று.

(6) ஜகத்திற்கு க்ஷேமம் உண்டாக்கவேண்டியதற்காக, சத்துவ சரீரத்தை திரிகுணாத்மகமான அம்சத்தினால் ஈசுவரன் ஸ்வீகரித்துக்கொள்ளுகிறார்.* ஜகத் ஸிருஷ்டி, ஸம்ஹாரம் என்பவை அநாதியாக இருப்பதால், ஈசுவரன் மனத்தில் எப்போதும் எல்லா குணங்களும் உள்ளன. அந்தந்த கல்பத்தில் ஸிருஷ்டி முறை இவ்விதமென்று சங்கல்பித்துக்கொண்டு, ஈசுவரன் ஒரு கல்பத்தின் ஸிருஷ்டியை ஸம்ஹரிக்கிறார். முன் சங்கல்பமானது மூலப்பிரகிருதியுடன் ஸம்ஹாரப்பிரளய காலத்தில் லய அவஸ்தையைப் பெற்றிருந்தாலும், ஸிருஷ்டி காலத்தில் அந்த சங்கல்ப வாசனையானது, பின்பு ஈசுவரனின் சத்துவ சித்த ரூபமாகப் பரிணமிக்கின்றது. ஒருவன் மறுநாள் சூரிய உதயத்திற்கு முன் எழுந்திருக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் தூங்குகிறான். பின்பு அவ்வெண்ணத்தின் காரியமாக, அந்தக் குறிப்பிட்ட காலத்தில் எழுந்திருக்கிறான். இது போலவே ஈசுவரன் ஸிருஷ்டி விஷயமும். ஈசுவரன் ஜகத்திற்கு அநுக்கிரஹம் செய்யவேண்டுமென்ற இச்சையும், அதனால் ஸிருஷ்டியும், இவை அநாதியாக இருக்கின்றமையால் பிரகிருதி குணங்களுக்கும் ஈசுவரனுக்கும் அந்நியோந்யாச்ரய தோஷம் இல்லை.

(7) வேதம், ஸ்மிருதி, புராணங்கள், இதிஹாஸங்கள், இவைகள் ஈசுவரனின் உத்கிருஷ்ட சத்துவ குணத்தினின்று உண்டாயின. அதாவது மகரிஷிகளின் சுத்த மனத்தின் ஸத்துவ நிலையில் தோன்றிய விஷயங்கள் பின்பு வெளிவந்தன.

---

* அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீச்வரோऽபி ஸந்

ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥

ப. கீ. 4-ம் அத்தியாயம் 6-ம் சுலோகம்.

* இதன் பொருள்— (நான்) பிறப்பற்றவனாகியும், அழிவற்ற சுபாவமுள்ளவனாகியும், பிராணிகளுக்கெல்லாம் ஈசுவரனாகியும், சொந்தமான பிரகிருதியை அதிஷ்டித்து, ஸ்வரூப சக்தியினாலே அவதாரஞ் செய்கிறேன்.

**25.** தத்ர நிரதிசயம் ஸர்வஜ்ஞபீஜம்॥

**அவரிடத்தில் (ஈசுவரனிடத்தில்) எல்லாவற்றையும் அறியும் சக்தியானது உயர்வற உயர்வு பெற்றது.***

1. இந்திரியங்களுக்குப் புறம்பாய் உள்ள விஷயம், கடந்த விஷயம், நடக்கப்போகும் விஷயம், நடக்கிற விஷயம் இவைகளைத் தனியாகவோ, ஒன்றாகவோ பெரிதாகவோ அல்லது சிறிதாகவோ அறியும் சக்தியானது சர்வஜ்ஞபீஜம். அதாவது இந்த ஞானம் மேன்மேலும் பெருகிக்கொண்டுபோய் எந்த இடத்தில் முடிவு பெறுகிறதோ, அந்த ஞானஸ்வரூபி ஈசுவரன். ஞானம் பெருகிக்கொண்டுபோய் முடிவுபெறும் இடம் ஈசுவரன் என்றதினால் ஈசுவரன் இருக்கிறான் என்று சித்திக்கும். அப்போது, சப்த பிரமாணம் வேண்டியதில்லையே என்றால், அநுமானத்தில் ஈசுவரன் உளன் என்று சாமான்யமான அறிவு மாத்திரம் உண்டாகும். அவன் குணங்களைப்பற்றியும், இத்தன்மையன் என்பதைப்பற்றியும் உள்ள விசேஷ ஞானம் சப்த பிரமாணத்தினால் தான் சாதாரண ஜீவர்களுக்கு உண்டாகும்.

2. அவருடைய சிருஷ்டியினால் அவருக்கு யாதொரு பிரயோஜனமுமில்லை. பிராணிகளுக்கு பிரயோஜனம் உண்டாகிறது. பிராணிகளுக்கு ஞான தர்மங்களை உபதேசிப்பதினால், "கல்பம், பிரளயம், மஹாப்பிரளயம் இவைகளில் ஏற்படும் ஜனன மரணங்களினின்று பிராணிகள் கரையேறும்படி செய்வதுதான் ஈசுவரன் அடையும் பிரயோஜனம். இவ்விதமே பஞ்சசிகாசாரியார் முன்னம் அடியில் வருமாறு சொல்லியிருக்கின்றார். "ஆதி வித்வான் (கபிலர்)

சுத்தஸாத்விக சித்தத்தை நிர்மித்து, அதன் மூலமாய், கருணையால் ஜிக்ஞாஸுவாகிய ஆசுரி என்பவருக்கு ஸாங்கிய சாஸ்திரத்தை உபதேசித்தார். கபிலர், மஹாவிஷ்ணுவின் அவதாரமாகையால், ஈசுவரன் பிராகிருத சரீரமில்லாதவர், அதனால் சுத்தசித்தத்தை நிர்மித்துக்கொண்டாரெனச் சொல்லியிருக்கிறது."

3. சாதாரணமாய் ஜனங்களுடைய மனம் ரஜஸ், தமஸ் என்ற குணங்களின் சம்பந்தத்தினால், ஆவரண விக்ஷேப சக்திகளுக்குட்பட்டிருக்கிறது. ஈசுவரனுக்கோ இவை யில்லை.

* குறிப்பு:—நாம் கிஞ்சிஞ்ஞன், அவர் ஸர்வஜ்ஞன். ஸ்ரீநம்மாள்வார், ஸ்ரீமாணிக்கவாசகர், முதலியோரது பாசுரங்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

"உயர்வற வுயர்நல முடையவன் எவனவன்
மயர்வற மதிநல மருளினன் எவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யெவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே."—நம்மாழ்வார்.

"எல்லாப் பொருள்கள் யாவையும் கடந்த இன்பமே"—மாணிக்கவாசகர்
"வாலறிவன்"—வள்ளுவர்.

4. புத்தர், கபிலர், அருகர், முதலான அநேக தீர்த்தங்காரர்கள் (சாஸ்திரத்தை உண்டுபண்ணியவர்கள், அவதார புருஷர்கள், மஹான்கள்) அந்தந்த மதங்களில் ஸர்வக்ஞர்களாக மதிக்கப்படுகின்றமையால் அவர்களை ஏன் ஸர்வக்ஞர்களாகச் சொல்லக்கூடாது? ஸர்வக்ஞன் என்ற பதம் அநுமானத்தினால், ஒருவன் என்றே ஏற்படும்.

அநுமானத்தினால் ஸாமாந்யமான ஞானம் உண்டாகுமேயன்றி விசேஷ ஞானம் உண்டாகாது. அவ்வீசுவரனுடைய விசேஷ குணங்களைப் பற்றிய ஞானம் உண்டாகாது. அது ஆகமத்தினால்தான் கூடும். யோக நிலையில் தேர்ச்சி அடைந்தவர்களைத் தவிர மற்றவர்களுக்கு (ஆகமம்—வருதல். இந்திரியங்கட்குப் புறம்பான விஷயங்களைப் புத்திக்குத் தெரிவிக்கும் சாஸ்திரம், ஆகமம். இது முக்கியமாய் வேதத்திற்கே சொல்லப்படுகிறது. எல்லாப் பிரமாணங்களுக்கும் விரோதமான க்ஷணிகஞானம், ஆத்மா இல்லை யென்பது, முதலியவைகளை சில ஆபாஸ பாஷண்ட மதசாஸ்திரங்கள் உபதேசிப்பதினால் அவை புத்திக்கு மயக்கத்தை உண்டு பண்ணுகின்றன. ச்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸங்கள், புராணங்கள் (ஞானோபதேச—விரோதமல்ல) அதாவது) இஹ, பர, லோக விஷய சுகங்கள், சாசுவதமான மோக்ஷ இவைகளை அடைவதற்கு உண்மையான உபாயங்களை உபதேசிக்க உண்டாக்கப்பட்டன.

ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் இவைகளின் வாக்கியங்களும் வாக்யார்த்தங்களும் காலம் செல்லச் செல்ல மனிதர்களின் லோபத்தினாலும், அறிவின்மையாலும், ஜனங்களுடைய பழக்கத்தில் வார்த்தைகளுக்குப் பொருள் வித்தியாசங்கள் காலாவர்த்தியில் ஏற்படுவதாலும், சில மாறியும், சில நஷ்டமாகியும், (உதாரணம் சாமவேத சாகைகள் ஆயிரத்தில் சுமார் இருபதுதான் மிகுந்து வழங்கி வருகின்றன) புதிய பொய் வாக்கியங்கள் ஏராளமாகச் சேர்க்கப்பெற்றதும், சிலவற்றிற்கு அர்த்தமே மறைந்துபோய் சப்தம் மட்டும் மீதி கண்டதும் தற்காலத்தில் குழப்பத்திலிருக்கின்றன. ஆயினும் இப்போதிருக்கும் ஸ்திதியிலுங்கூட அவைகளிடமிருந்து துட்ப ஆத்ம விஷய ஞானங்களை நாம் அடையலாம்.

ஈசுவரனின் தன்மையைக் குறித்து இவ்விதம் வாயு புராணம்:—எல்லாவற்றையும் அறியுந்தன்மை, என்றும் திருப்தியாயிருத்தல், அநாதியான ஞானம், ஸ்வதந்தரம் என்றும் குறைவில்லா சக்தி, அனந்த சக்தி, இவை ஆறும் ஈசுவர அங்கங்கள் என்று அறிஞர்கள் சொல்லுகின்றார்கள். ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், தபஸ், ஸத்தியம், க்ஷமை, தைர்யம், ஜகத்தை சிருஷ்டிக்கும் சக்தி, ஆத்ம ஸ்வரூப ஞானம், எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயிருத்தல் என்ற 10 குணங்கள் எப்பொழுதும் அழிவில்லாமல் ஈசுவரனிடம் இருக்கின்றன. இத்தன்மையான அங்கங்களையும் குணங்களையும் உடையவரானால் துக்கம் நிறைந்த இந்த லோகத்தை ஈசுவரன் சிருஷ்டித்திருக்கமாட்டார் என்ற ஆக்ஷேபணைக்கு சமாதானம்:—பரம சிரேயஸ்கரமான கைவல்யத்தைப் பிராணிகள் அடையும் பொருட்டு சுகதுக்கங்களை ஏற்படுத்தி, அவைகளின் அநுபவங்களினால் பிராணிகளின் மனம் சுத்தியாகி, ஞானம் உண்டாகி, பிரக்ருதி புருஷ விவேகம் ஏற்படுகிறது. அதனால் கைவல்யம் ஸித்திக்கிறது. இது ஈசுவரனின் பரமகாருண்யத்தைக் காட்டுகிறது.

முக்தி இருவிதம் :—(1) சத்யோமுக்தி (2) கிரமமுக்தி. இந்த ஜன்மத்திலேயே உடனே முக்திபெறுதல் ஒருவிதம். மேல் மேல் படியேறி மேல் மேல் லோகங்களிற் சென்று கடையில் பிரம்மலோகம் (7-வது லோகம்) போய் பிரம்மாவுடன் தங்கியிருந்து மஹா பிரளயாந்தத்தில் பிரம்மாவுடன் சேர்ந்து முக்தி பெறுதல் கிரமமுக்தி எனக் கூறப்படுவது. ஈசுவரனால் உபதேசிக்கப்பட்ட ஞானதர்மங்களினால் அநேகர் இம்முக்தியை அடைகிறார்கள். மற்றவர்களோ ஜன்மமரண துக்கத்தை யடைகிறார்கள். அவரவர்கள் விகாசமுறையில் இருக்கின்றபடிகளான நிலைமையுடன் பிரளயகாலத்தில் பிரகிருதி லயம் அடைகின்றார்கள். பின்பு வேறு ஒரு பிரம்மாண்டம் சிருஷ்டி ஏற்படுங்காலத்தில் அந்தந்த நிலையில் வெளிக்கிளம்புகின்றார்கள். (ஆனால் இவர்கள் முன் சொல்லிய பிரகிருதிலீனர்கள் அல்லர். பிரகிருதிலீனர்கள் உபாஸனாக்கிரமத்தில் முக்தியடைகின்றவர்கள்.) பிரம்மாவின் ஒரு பகலில் (கல்பத்தில்) 14 மன்வந்தரம், 14 மநு, 14 இந்திரன். இவ்வாறு அதிகாரிகள் பதினான்கு பதினான்காக நிகழும். பிரம்மாவின் ராத்திரி நைமித்திகப்பிரளயம் எனப்படும். ஓர் ஓர் கல்பத்தில் பூ: புவ: ஸுவ: என்ற மூன்று லோகங்களுக்கு மாத்திரம் லயம். 4 யுகங்களும் 71 தரம் சுற்றிவந்தால் ஒரு மன்வந்தரம். இப்போது பிரம்மாவுக்கு 51-வது வயது நடப்பு. வைவஸ்வத மன்வந்தரத்தில் 27 தடவை சதுர்யுகங்களும் சுற்றி வந்துவிட்டன. பிரம்மாவின் 100-வது வயசு முற்றுப்பெறுகிற காலமே மஹாப்பிரளயகாலமாம். சத்தியலோகத்தில் பூதங்கள் எல்லாம் லயமடைகின்றன. யோகிகளின் குருபரம்பரை முதல்வர் ஈசுவரன், ஹிரண்ணிய கர்ப்பராவர்.

**26.** ஸ பூர்வேஷாமபி குரு:
காலேநாநவச்சேதாத் ||

**காலவரம்பைக் கடந்தவராகையால் அவர் பூர்வீக ஞானாசாரியர்களின் குருவாவர்.** *

**27.** தஸ்ய வாசக: ப்ரணவ: ||

**அவருடைய பெயர் பிரணவம்.**

குறிப்பு :—பிரணவம் என்பதின் பொருள் 'என்றும் புதிதாயுள்ளது' என்பதாம். மற்றைய சப்த ராசிகள் மாறும். பிரணவம் ஒன்றே என்றும் மாறாதது, நித்தியமானது. 'ஓம்' என்ற பதத்திற்குப் பொருள் ஈசுவரன் என்பதே. பதம், அர்த்தம் (பொருள்) இவைகளின் ஸம்பந்தம் ஸங்கேதமாக ஏற்பட்டதா, அல்லது தீபம், பிரகாசம் இவைகளின் சம்பந்தம் போன்று என்றும் உடன் நிகழ்வதா? அவருக்கும் (அர்த்தத்திற்கும்) பிரணவத்தின் பாராயணத்திற்கும் (பதத்திற்கும்) உள்ள சம்பந்தம் ஸ்வாபாவமாய் என்றும் உள்ளது. பதத்திற்கும் அர்த்தத்திற்கும் உள்ள சம்பந்தத்தை சங்கேதம் வெளிப்படுத்துகின்றது. பிதா, புத்திரன் என்பவர்களுக்குள் நிகழும் சம்பந்தம் என்றும் உள்ளது. அதை வார்த்தை பிரகாசப்படுத்துகிறது. ஓர் ஓர் கல்பத்தின் முடிவில், பிராணிகள் வாசனைகளுடன் லயமடைந்து, பின்பு வேறு கல்ப ஆரம்பத்தில் எல்லா வாசனைகளுடன் வெளிவருமாறு

* மற்ற குருக்கள் கால வரம்புக்குட்பட்டவர்கள். இவர் ஆதி குரு. சுவேதாசுவதரோபநிஷத்தின் 'யோ ப்ரஹ்மாணம்' என்ற மந்திரம் இங்கு கவனிக்கத்தக்கது.

*போல, சப்த ஜாத ராசிகள் அவைகளின் சக்தியுடன் (இன்ன அர்த்தத்திற்கு இன்ன சப்தம் என்ற சம்பந்தம்) பிரளய காலத்தில் பிரகிருதியில் லயம் அடைகின்றன; பின்பு சிருஷ்டி காலத்தில் வெளிப்படுகின்றன. சப்தத்திற்கும் அர்த்தத்திற்கும் உள்ள சம்பந்தம் பரிணாம நித்தியம், கூடஸ்த நித்தியமன்று. புருஷன் ஒருவனே கூடஸ்த நித்தியன். சப்த ராசிகள் எப்போதும் மாறிக்கொண்டேயிருக்கின்றன. பூமியினின்று உண்டாகின்ற ஸ்தாவர ராசிகள் (புல், பூண்டு) மற்ற காலங்களில் பூமியோடு பூமியாக லயமாகி, வருஷா காலத்தில் வெளியாகின்றன. அவை போல சிருஷ்டி காலத்தில், முன் லயம் அடைந்த வஸ்துக்கள், ஜீவராசிகள், சப்த ராசிகள் பின் வெளிப்படுகின்றன.* *

**28.** தஜ்ஜபஸ்ததர்த்தபாவநம் ॥

அப்பிரணவத்தை ஜபித்தலாவது அதன் பொருளாகிய ஈசுவரனைத் தியானித்தலாகும்.

குறிப்பு :—அப்படிச் செய்வதினால் யோகியின் மனம் ஆவரண விக்ஷேப தோஷம் குறைந்து ஏகாக்கிரியம் பெறுகிறது. அந்த ஏகாக்கிரியத்தினால் ஸமாதியும் அதன் பலனான ஈசுவரப் பிரசாதமும் உண்டாகும்.

**29.** தத: ப்ரத்யக்சேதநாதிகமோ(அ)ப்யந்தராயாபாவச்ச ॥

அதனால் புருஷனுடைய உண்மையான ஸ்வரூப ஞானமும் விக்கினங்கள் நீங்குதலும் உண்டாகும்.

குறிப்பு :—ஈசுவரப் பிரஸாதத்தினால் வியாதி முதலானவைகள் இல்லையாகும். இவ்விதம் விட்டு அகன்றவிடம், தன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தைப் பார்ப்பான். ஈசுவரன் சுத்தனாயும், பிரஸன்னராயும் (விம்லசங்கள் இல்லாதவராயும்), கேவலனாயும் (புண்ணிய பாப சம்பந்தமில்லாதவனாயும்), ஜன்ம, ஆயுள், போகங்களில்லாதவனாயும் எப்படி இருக்கிறானோ, அப்படியே புத்திக்குப் பிரகாசத்தை உண்டுபண்ணுகிற புருஷனும் இருக்கிறான். விருத்த தர்மங்கள் உள்ள இரண்டு வஸ்துக்களில் ஒன்றை அறிந்தால் மற்றதை அறிய முடியாது. ஒரே மாதிரியான தர்மங்களையுடையவைகளாக இருப்பின் ஒன்றை அறிந்தால் மற்றதை அறிதல்கூடும். அதனால், ஈசுவரனுக்கும் புருஷனுக்கும் (யோகியின் புத்திக்கு சாக்ஷியான புருஷனுக்கும்) மேற்கண்டபடி குணசாம்யமிருப்பதால் ஈசுவரஸ்வரூபத்தை அறிவதால், புருஷ ஸ்வரூபத்தை அறிவதாகும். பிரத்தியக்சேதனன் என்றால் அவித்தியாவான், அதாவது உள்ளபடி அறியாமல் விபரீதமாக அறிகிறவன் என்பதாம். இதன் தேர்ந்த கருத்து, இந்தப் பிரணவ உபாஸனையால், சித்தம் அந்தர்முகப்படுதலும், தடைகள் நீங்குதலும் உண்டாகும்.

---

* கடோபநிஷத்திலும் பிரச்னோபநிஷத்திலும் பிரணவத்தைப்பற்றிய மந்திரங்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

30. 𑌵𑍍𑌯𑌾𑌧𑌿𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌨𑌸𑌂𑌶𑌯𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌾𑌵𑌿𑌰𑌤𑌿𑌭𑍍𑌰𑌾𑌨𑍍𑌤𑌿
𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌲𑌬𑍍𑌧𑌭𑍂𑌮𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌨𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌤𑍍𑌵𑌾𑌨𑌿 𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑌿
𑌕𑍍𑌷𑍇𑌪𑌾𑌸𑍍𑌤𑍇𑌽𑌨𑍍𑌤𑌰𑌾𑌯𑌾𑌃 ॥

தடைகளாவன :—(1) வியாதி, (2) மநநோய்மை, (3) ஸம்சயம், (4) பிரமாதம், (5) ஆலஸ்யம். (6) அவிரதி (துறக்கல் இன்மை), (7) பிராந்தி தர்சனம், (8) யோகபூமியை அடையாமை, (9) சமாதிநிலையினின்று நழுவுதல். மநத்திற்கு விக்ஷேபத்தை யுண்டுபண்ணும் தடைகளான, இவை ஒன்பது. இவைகளால் தான் மநோவிர்த்திகள் உண்டாகின்றன.

குறிப்பு :—வியாதி - வாத, பித்த, சிலேஷ்ம தாதுக்களும், ஆகாரங்களின் ரசமும், மகல் முதலிய இந்திரியங்களும் சேர்க்கையில்லாமலிருத்தலால் உண்டாகும்.

மநோய்மை = ஒரு காரியத்தைச் செய்வதற்குத் தகுதியில்லாமை, அதாவது, பூர்வ அநுபவமின்மையாலும், பூர்வ ஸம்ஸ்காரமின்மையாலும் ஒரு காரியத்தைச் செய்வதற்குத் தகைமையின்றிருத்தல்.

ஸம்சயம் := இதுவோ அதுவோவென்று சந்தேகங்கொள்ளுதல்.

பிரமாதம் := ஸமாதி ஸாதனங்களில் கவனமின்மை.

ஆலஸ்யம் := தமஸினால், சரீரம், மநம், இரண்டும் பிரவிர்த்திக்காமல் இருத்தல்.

அவிரதி := விஷய சுகங்களின் மேல் ஆசை, விஷயங்களில் ஒழிவில்லாமை

பிராந்திதர்சனம் := பிரமையினால் ஒன்றை வேறொன்றாகவறிதல்.

யோகபூமியையடையாமை = யோகாப்பியாஸம் செய்துகொண்டு வருகையில் உயர்ந்த ஸமாதி நிலையைப் பெறாமல் கீழான பூமிகளின்கண் உண்டாம் சித்திகளின் மேல் ஆசைகொண்டு, அவைகளில் திருப்தியாகவிருத்தல்.

ஸமாதிநிலையினின்று நழுவுதல் := ஸமாதி நிலைபெற்ற பிறகு அதைக் காப்பாற்றிக்கொள்வதில் முயற்சியில்லாமை.

31. 𑌦𑍁𑌃𑌖𑌦𑍌𑌰𑍍𑌮𑌨𑌸𑍍𑌯𑌾𑌙𑍍𑌗𑌮𑍇𑌜𑌯𑌤𑍍𑌵𑌶𑍍𑌵𑌾𑌸𑌪𑍍𑌰𑌶𑍍𑌵𑌾𑌸𑌾
𑌵𑌿𑌕𑍍𑌷𑍇𑌪𑌸𑌹𑌭𑍁𑌵𑌃 ॥

துக்கம், தௌர்மநஸ்யம், சரீர நடுக்கம், உச்வாஸம், நிச்வாஸம் இவை விக்ஷேபத்துடன் நிகழ்பவை.

குறிப்பு :—துக்கம் என்பது ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் இவைகளால் உண்டாகும். துக்கம் பிரதிகூலமான அநுபவம்.

தௌர்மனஸ்யம் :— செய்த முயற்சி பலிக்காமல் அதனால் உண்டாகும் மனக் கலக்கமாம்.

சரீரநடுக்கம் :— அங்கங்களின் அசைவு. இது யோகாப்பியாசத்திற்கு விரோதி.

உச்வாச நிச்வாஸம் :— நம்முடைய ஸ்வாதீனமின்றி காற்று உள்ளே போதலும் வெளியே வருதலும்.

ரேசகம், பூரகம் என்றவை இத்தனை மாத்திரை என்ற அளவுக்குட்பட்டு ஸ்வாஸம் நடைபெறும்படி செய்தல்.

32. தத்ப்ரதிஷேதார்த்தமேகதத்வாப்யாஸ: ||

இவைகளின் நிவர்த்திக்கும் பொருட்டு ஒன்றான தத்துவத்தை மாத்திரம் அப்பியஸித்தல் வேண்டும்.

குறிப்பு:—(1) நிவர்த்திப்பது என்றால், முன் சொல்லியிருக்கிறபடி, வைராக்கியத்தால் நிவர்த்தி ஏற்படுத்துதலாம். ஒன்றான தத்துவம் என்பதற்கு ஈசுவரன் என்பது அர்த்தமாம். விஞ்ஞான பிக்ஷுவின் அபிப்பிராயப்படி யாதேனும் ஒரு தத்துவத்தைப் பற்றிச் சிந்தனை செலுத்துதல் இதில் பயன்படும் என்கிறார்.

(2) க்ஷணிக விஞ்ஞான வாதிகளின் மத கண்டனம்:—

(a) அவர்கள் மதப்படி, மனோவிருத்திகளைத் தவிர, மனம் என்று பிரத்தியேகமாக வேறொன்றுமில்லை. ஒவ்வொரு விருத்தியும் க்ஷணிகம் அதனால் ஒவ்வொரு விருத்தியும் நிகழ்தல் ஏகாக்கிரமாகும். அதனால் விக்ஷிப்தமே இல்லை என முடியும். அதனால் யோகாப்பியாஸமுயற்சி வேண்டியதில்லை எனவேற்படும். அது சரியன்று, மனம் வேறு, க்ஷணிகமன்று. நிலையுள்ளது. ஒரு பதார்த்தத்தைப் பல பதார்த்தங்களினின்று வேறுபடுத்தி அந்த வேறுபடுத்தப்பட்ட பதார்த்தத்தில் மனத்தை நிற்கும்படி செய்தல் கூடும். அதனால் ஏகாக்கிரம் ஏற்படும். அதனால் விக்ஷேபநிவிருத்திக்காகச் செய்யவேண்டிய முயற்சி பிரயோஜனமுள்ளது தான்.

(b) க்ஷணிகவிஞ்ஞான வாதிகளின் வேறு அபிப்பிராயம் :— விருத்திகள் பல உள. அவைகளின் பிரவாகத்தில், ஒரே விருத்தியாகவே மனம் மாறி நிற்குமல்லவோ? அது சரியன்று. அவர்களின் ஸித்தாந்தப்படி, விருத்தியும் மனமும் க்ஷணிகமாதலால், இரண்டிலும் பிரவாகம் ஏற்படுதல் கூடாது. அதனால் ஏகாக்கிரம் உண்டாவதற்கு அவகாசமில்லை. நான் என்ற ஆலய விஞ்ஞானம் (சாமான்ய அகங்காரம் என்பர் வேதாந்திகள்) என்ற ஸ்திரமான நிலைமை இருக்கின்றது என்றாலோ, அந்த "நான்" என்பதற்கு விக்ஷிப்தமின்மையாலும், விக்ஷிப்தம் மனத்துக்கே பொருத்தமாயிருக்கின்றமையாலும் யோக முயற்சி பிரயோஜனம் இன்றே என்பது ஏற்படும்.

(c) க்ஷணிக விஞ்ஞானவாதிகள், அதாவது வைநாசிகர்களின் சித்தாந்தத்தில், தர்மம் ஒன்றே உளது. அதை ஆச்ரயிக்கும் தர்மி என்பது இலது என்பதாம். அதனால் அந்தக்கரணம் இல்லை என்பார். விருத்திகளின் பிரவாகம் இருக்கின்றது என்றால், அது சரியன்று. பிரவாகம் என்றால் ஸஜாதீயப் பிரத்தியயம் (ஒரே மாதிரியான விருத்திகள்) தொடர்ந்து நிகழவேண்டும். அப்படியில்லாமல் விஜாதீயப் பிரத்தியயம் (விருத்தமான பிரத்தியயங்கள்) நடைபெற்றால் பிரவாகம் எங்ஙனம் உண்டாகும்? விருத்திகள் தனித்தனியாக உண்டானால் அழிகின்றமையால், ஒரு விருத்தியின் பலனை மற்றொரு விருத்தி அநுபவிப்பதும் அறிதலும் எங்ஙனம்?

(d) மனம் ஒவ்வொரு க்ஷணத்திற்கும் வேறு வேறு, என்றால் நான் என்ற அநுபவம் நிகழமாட்டாது. விருத்திபேதங்கள் இருப்பினும், நான் என்ற தொடர்புள்ளது. விருத்திகள் விஷயங்கள் வெவ்வேறாயினும், நான் என்ற ஞானம் அபின்னமாக அநுபவத்திலிருக்கின்றது. சித்தம் ஒவ்வொரு விஷயத்திற்கும் வேறு வேறாயின், இந்த நான் என்ற அநுபவம் எப்படி உண்டாகும்? அது பிரமை (மருள்) என்று சொல்வது சரியன்று. அபேதமான 'அஹம்' என்ற ஞானம் பிரத்தியக்ஷமான அநுபவம். இதற்கு விரோதமான வைநாசிகர்களின் மதம்சரியன்று.

**33.** மைத்ரீகருணாமுதிதோபேக்ஷாணாம் ஸுகது:க
புண்யாபுண்யவிஷயாணாம்பாவனாதச்சித்த
ப்ரஸாதநம் ॥

சுகமாயிருப்பவர்கள், துக்கிக்கிறவர்கள், புண்யம் செய்பவர்கள், பாபிகள், இவர்களிடம் முறையே ஸ்நேகம், கருணை, சந்தோஷம், உபேக்ஷை இப்பாவனைகளை அப்பியாசம் செய்வதால் மனம் பிரஸாதம் பெறுகிறது.

குறிப்பு:—ராகத் த்வேஷாதிகள், அகங்காரம், அசூயை, ஈரிஷை, கோபம் முதலிய துர்க்குணங்கள் நீங்கி மனம் நிர்மலமாக வேண்டுவதற்கு உபாயம் சொல்லுகின்றார். சுகமாயிருப்பவரைப் பார்த்தால் ஈரிஷை உண்டாகும் அதனால் மனத்திற்குக் கல்மஷம் உண்டாகும். அப்படி உண்டாகாமல் இருந்தற் பொருட்டு அவர்பால் ஸ்நேஹபாவத்தையும், துக்கத்திற்குள்ளானவர்களிடம் தயை, காருண்ணியத்தையும்* புண்ணியம் செய்பவர்களிடம் சந்தோஷத்தையும், பாபம் செய்பவரிடத்தில், அவரையும் அவர் செய்யும் பாபத் தொழிலையும்பற்றிக் கவனியாதிருத்தலையும், தம் மனத்தில் உண்டு பண்ணிக்கொள்ளல் வேண்டும்†. அப்படிச் செய்வதினால் மனத்தின் சாஞ்சல்யம் நீங்கும். பரிசுத்தமானவும், ரஜஸ், தமோகுணங்கள் நீங்கப் பெற்று, மனம் சுத்த ஸாத்விக குணமுடையதாகும். அதனால் சித்தம் ஐகாக்ரியம் அடையும், மனம் ஒரு நிலைபெறும்.

இந்த ஸூத்திரம் தியானகாலங்களில் தவிர, மற்ற காலங்களில், அதாவது உலகத்தில் நடைபெறும் காலத்தில், யோகி ஒழுகவேண்டிய முறையை உபதேசிக்கின்றது.

---

* அதனால் பிறர்க்கு அபகாரம் செய்தலை நிவர்த்தித்து, உபகாரம் செய்தலே நலம் என்ற எண்ணம் உண்டாகும்.

† அப்படிச் செய்வதினால், உண்டாகும் கோபம் விலகும்.

மனம் நிர்மலமானால் சூரியன், சந்திரன், கிரகங்கள், ரத்னங்கள் இவைகளின் தேஜோ ரூபங்கள் காணுந்தன்மையதாகத் தோன்றுகின்றன. அதாவது அந்த மனம் அந்த ரூபங்களாக ஆகிறது. ஸுஷும்நா நாடியை ஆசிரயித்திருக்கின்றமையால், இந்த மனம் ரஜஸ், தமஸ் இரண்டும் குறைந்தும் சத்வம் மேலிட்டும் இருக்கின்றது. ஆதலால் இந்த நிலை ஜ்யோதிஷ்மதீ ( ஜோதியை உடையது ) என்று சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

முன்னே சொன்னபடி விஷயங்களில் சம்பந்தம் பெற்றது போல, அஸ்மிதையில் ( நான் இருக்கிறேன் என்ற பாவம் ) ஏகாக்கிரதை பெற்ற மனம் ஆனது அலையற்ற சமுத்திரம் போலவும், சாந்தமாயும், ( ரஜஸ், தமஸ் அற்றதாயும் ) என்றும் விசாலமுள்ளதாயும், நான் என்ற சுத்தப் பிரஞ்ஞை மாத்திரம் உள்ளதாயிருக்கின்றது. இவ்விதமாகவே சாங்கிய சூத்திர வியாக்கியாதாவான பஞ்சசிகாசாரியரும் சொல்லுகின்றார்.

அஸ்மிதையை ஆசிரயித்த மனப் ப்ரவ்ருத்தி ஜ்யோதிஷ்மதீ எனப்படும். இதனால் யோகியின் மனம் ஸ்திரமான நிலையை அடைகின்றது.

37. வீதராகவிஷயம் வா சித்தம் ॥

அல்லது ஆசைவிட்ட மஹா புருஷர்களை மனம் விஷயீகரித்தலினால் (அது ஸ்தைர்யம் பெறும்.)

குறிப்பு :—ஆசைவிட்டவர்களான வியாஸர் முதலிய மஹர்ஷிகளின் குணங்களைத் தியானித்தல் வேண்டும். அவர்களின் மேலோ நிலையைத் தியானித்தலால் அந்நிலையை, அப்பியாஸம் செய்கிற யோகி பெறுகிறான்.

38. ஸ்வப்நநித்ராஜ்ஞாநாலம்பநம் வா ॥

அல்லது ஸ்வப்னத்திலும் நித்திரையிலும் ஏற்படும் ஞானத்தை ஆசிரயித்துத் தியானிப்பதால் மனம் நிலைபெறும்.

குறிப்பு :—(1) வேறு ஒரு அர்த்தம் " அல்லது ஸ்வப்நத்திலும் நித்திரையிலும் ஞானம் நழுவாது வைத்துக்கொள்வதால்." என்பதாம். ஜாக்கிரத்தினின்று ஸ்வப்நத்திற்குப் போகும்போதும், ஸ்வப்நத்தினின்று ஸுஷுப்திக்குப் போகும்போதும் நான் என்ற பிரஞ்ஞையின் தொடர்பு அற்றுப்போகிறது. அத்தொடர்பு அறாமல், பிரஞ்ஞை நிலைத்தல் வேண்டும். அற்றுப்போகும் நிலையை பாழ் என்று சொல்லுகிறது. அப்பாழைப்பிரக்ஞையுடன் தாண்டுதலுக்கு முயல வேண்டும். இதுதான் இந்தசூத்திரத்தின் தாத்பரியம். நினைவிற்கும் கனவிற்கும் மத்தியில் ஒரு பாழ், கனவிற்கும் ஸுஷுப்திக்கும் மத்தியில் ஒரு பாழ், ஸுஷுப்திக்கும் துரியத்துக்கும் மத்தியில் ஒரு பாழ், ஆகமுப்பாழ்கள், அதாவது லய ஸ்தானங்கள் உண்டு.

(2) இந்திரியங்களுக்கு விஷயங்கள் இல்லாமலும், மனம் ஆனது வாஸனா ரூபமான விஷயங்களை அநுபவிக்கும் நிலை ( அவஸ்தை ) ஸ்வப்நமாம். நித்திரையின் லக்ஷணம் முன் 10-ம் சூத்திரத்திற் கண்டுகொள்க.

(3) ஸ்வப்நத்தில் யாதேனும் ஒரு தேவதை அல்லது மஹாபுருஷர் அல்லது உயர்ந்த பாவம் தோன்றும் பக்ஷத்தில் நினைவில் அந்த தேவதை, அந்த புருஷன், அந்த உயர்ந்த பாவம் இவைகளின்மேல் மனத்தை நிறுத்தினால், மனம் ஒருமுகப்படும். யோகி ஸ்தைர்யம் பெறுவான்.

(4) ஸுஷுப்தியின் ஞானம் :—ஸாத்விக ஸுஷுப்தியின் ஞானம், "சுகமாய்த் தூங்கினேன்" என்ற மட்டில்தான் ஸ்ம்ருதி நிலையில் உண்டாகும். அந்நிலையில் (சுகம் அநுபவிக்கும் நித்திரை சமயத்தில்) மனம் தன் நிலையிலிருக்கும். அதுவே ஏகாக்ரமான நிலை. பிரம்மவித்துக்கள் அந்த ஸுஷுப்தி ஸுகத்தையே பிரம்ம ஸ்வரூபம் என்கின்றார்கள். சாந்தோக்ய உபநிஷத்தில் ஸுஷுப்தியின் விசாரணையைப் பற்றிய விஷயம் இங்கு கவனிக்கத்தக்கது.

**39.** யதாபிமதத்யாநாத்வா ॥

அல்லது எது ஒருவனுக்கு நலமெனப்படுகிறதோ, அதின் மேல் தியானித்தலினால்.

குறிப்பு :—எது பிரியமாயிருக்கிறதோ, அதன்மேல் மனம் நிற்பதாகும். அதனால் ஏகாக்ரியம் சித்திக்கும். தேவதையைத் தனக்கும் பிரியமான ரூபமாகத் தியானித்தலினால், மனம் ஸ்தைர்யம் பெறும்.

**40.** பரமாணு பரமமஹத்வாந்தோऽஸ்ய வசீகார: ॥

(இவ்விதமாய்த் தியானிக்கின்ற யோகிக்கு) பரம அணு முதல் பரம மஹத் வரையில் (உள்ள எல்லாம்) ஸ்வாதீனப்படும்.

குறிப்பு :—மேற்கண்ட உபாயங்களினால், யோகியானவன் ஸ்தூலவஸ்து முதல் பர வர மஹாஸூக்ஷ்மவஸ்து வரை தியானம் செய்யும்படியான திறமையும் ஸூக்ஷ்ம வஸ்து முதல் மஹா ஸ்தூல வஸ்து வரை தியானம் செய்யும்படியான திறமையும் பெறுதல் கூடும். இதில் எவ்வித தடையும் கிடையாது. இவ்விதமாய்ப் பெற்ற யோகியானவன், ஏகாக்ரியத்தின் பூர்ணத்திறமையைப் பெறுகிறான். இனி அவ்விஷயத்தில் பயிற்சி வேண்டியதில்லை.

**41.** க்ஷீணவ்ருத்தேரபிஜாதஸ்யேவ மணேர்க்ரஹீத்ரு
க்ரஹணக்ராஹ்யேஷு தத்ஸ்ததஞ்ஜநதா ஸமாபத்தி: ॥

இவ்வித அப்பியாசத்தால், மனோவிர்த்திகள் க்ஷீணமாகியிருக்கின்ற யோகியின் மனஸ் ஜீவாத்மா இந்திரியங்கள், விஷயங்கள் இவைகளுடன் ஏக பாவத்தை அடையும். ஆதலால் நிர்மலமான ஸ்படிக மணியைப் போன்றதாகும்.

குறிப்பு :—ஸ்படிக மணியின் ஸமீபத்தில் செம்பருத்தியின் புஷ்பத்தை வைத்தால் அதன் நிறம் அம் மணியில் தோன்றிடும். அது போல யோகியின் மனம் இருக்கும். விர்த்திகள், சாத்விக, ராஜஸ, தாமஸம் என மூன்று விதங்கள். ராஜஸ, தாமஸ விர்த்திகள் மாத்திரம் முதலில் க்ஷயத்தை அடைகின்றன. சாத்விக

**43.** [illegible]

ஸ்மிருதி பரிசுத்தமான நிலையிலிருந்து, நான் என்ற பிரஞ்ஞை அற்று இருக்கிறது போலவும் (தியானம் பண்ணப்படும்) வஸ்து மாத்திரமாக மனம் நிற்கும் நிலைமையானது, நிர்விதர்க்க ஸமாபத்தி எனச் சொல்லப்படும்.

*குறிப்பு :—ஸ்மிருதி, பிரத்தியக்ஷம், சப்தம, அநுமானம் முதலிய பிரமாணங்களால் அநுபவித்த விஷயங்களின் நினைப்பு. இந்த ஸமாபத்தியில் திரிபுடி அற்று மனம் வஸ்து ரூபமாக ஆகிறது. ஷெ இரண்டு ஸமாபத்திகளும் ஸ்தூலமான வஸ்துக்களைத் தியாகித்தலாம்.*

**44.** [illegible]

முன் சொன்ன (ஸவிதர்க்க நிர்விதர்க்க ஸமாபத்திகளின்) முறைப்படியே சூக்ஷ்மமான வஸ்துக்களை விஷயீகரிக்கிற ஸவிசார, நிர்விசார ஸமாத்திகள் சொல்லப்படுகின்றன.

*குறிப்பு :—முன் ஸவிதர்க்க நிர்விதர்க்க ஸமாபத்திகளில், ஸ்தூலமான விஷயங்களின் தியானம் திரிபுடி உள்ளதாகவும், திரிபுடி அற்றதாகவும் நிகழ்ந்தது. அவ்விதமே, சூக்ஷ்மமான வஸ்துக்களை விஷயீகரித்தலிலும், தியானித்தலிலும், திரிபுடி உள்ளது ஸவிசார ஸமாபத்தி என்றும், திரிபுடி அற்றது நிர்விசார ஸமாபத்தி யென்றும், அறியத்தக்கது. விசாரம் என்றால் தியானத்தில் ஒரு நிலையாம், தர்க்க விசாரம் அன்றும். (இவைகள் அலையும் மனத்தை நிறுத்தும் முறை.)*

**45.** [illegible]

(மேற்கண்ட) ஸூக்ஷ்மமான வஸ்துவை விஷயீகரித்தலானது மூலப் பிரகிருதிவரை நடைபெறுகிறது.

*குறிப்பு :—பஞ்சபூதங்களின் சூக்ஷ்மமான நிலை—பஞ்சதந்மாத்திரைகள், பஞ்சதந்மாத்திரைகளின் சூக்ஷ்மமான நிலை லிங்கம் அதாவது மஹத்தத்துவம். மஹத்தத்துவத்தின் சூக்ஷ்மமான நிலை அலிங்கம், அதாவது மூலப்பிரகிருதி. மூலப் பிரகிருதியை விட சூக்ஷ்மமான வஸ்து இல்லை. மூலப்பிரகிருதியை விட சூக்ஷ்மமாகப் புருஷன் இருந்தாலும், புருஷன் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாக இல்லை. மூலப்பிரகிருதி யோகிகளின் மதப்பிரகாரம் பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாக இருக்கின்றமையால், அதுவே முடிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.*

**46.** [illegible]

(மேற்கண்ட நாலு ஸமாபத்திகளும்) பீஜத்துடன் கூடிய ஸமாதிகளே.
*குறிப்பு :—"பீஜத்துடன் கூடிய" என்றால் "வெளியிலுள்ள வஸ்துவை ஆலம்பனமாக ஆசிரயித்த" என்பதாம்.*

குறிப்பு:—இந்நிலையில் உள்ள யோகியானவன், வெளி விஷயங்கள் தன் மனத்தில் தங்க இடம் கொடான். அந்நிலைமையான பூர்வ வாஸனைகள் இருப்பினும், அவைகள் தன்னை மேற்கொள்ளவும் இடங்கொடான். ஸமாதியினால், பிரஞ்ஞையானது ஸ்திரப்படுகிறது. அதனால் ஸமாதியாலான ஸம்ஸ்காரமானது, மேன்மேலும் விருத்தியடைகிறது. சாதாரண விஷய அநுபவத்தில் மனம் அதன் கண்ணே நிற்பது போல ஸமாதி நிலை உதித்திட, மனம் அந்நிலையில் இருப்பதாகும். இரண்டிற்கும் வித்தியாஸம் இல்லையென்றில்லை, வித்தியாஸம் உண்டு. ஸமாதி நிலையால் ஏற்படும் ஐகாக்ரியமானது மனத்தின் விஷய வாஸனைகளைப் போக்கி அதைத் தூய்மைப்படுத்தும் இயல்பினது; புருஷ ஸாக்ஷாத்காரம் உண்டாகும்படி செய்கிறது. புருஷ ஸாக்ஷாத்காரம் உண்டாகவே மனம் விருத்தியின்றி ஒடுங்குகிறது. மனோநாசம் உண்டாகிறது என்னலாம். விஷய அநுபவத்தின் ஐகாக்ரியமானது விஷய அநுபவங்களை விருத்தி பண்ணுகிறது.

**51.** தஸ்யாபி நிரோதே ஸர்வ-
நிரோதாந்நிர்பீஜ: ஸமாதி: ॥

மேற்கண்ட (ரிதம்பரா பிரஞ்ஞையால் ஏற்படுகிற) ஸம்ஸ்காரப் பிரவாகத்திற்குத் தடை உண்டாகும்போது எல்லா ஸம்ஸ்காரங்களுக்கும் தடை உண்டாகின்றது. அந்நிலை "நிர்பீஜம்" என்ற ஸமாதியாகும்.

குறிப்பு:—இந்த நிர்பீஜ ஸமாதியானது எல்லா ஸம்ஸ்காரங்களையும் பாதிக்கின்றது. இதனால் மனத்தின் விஷய அநுபவச்செயல் அற்றுப்போகிறது. யோகியானவன் கைவல்யத்தை அடைகிறான். அந்நிலையில் புருஷன் தன் ஸ்வரூப மாத்திரத்தில் இருப்பவனும், சுத்தனும், கேவலனும் ஆகிறான். இந்நிலையில் "முக்தன்" எனப்படுகிறான். முதன்மையில், பல விருத்திகளால் சித்தம் அலைவுள்ளதாக இருந்து, பின்னர் யோகாப்பியாசத்தால் பல விருத்திகள் தவிர்ந்து, ஒரே விருத்தி மாத்திரம் ஏற்பட்டது. இந்நிலையில் நான் என்ற பிரஞ்ஞை உள்ளது. பின்னர் அந்த விருத்தியும் ஒழியவே கைவல்ய பதவி ஸித்திக்கிறது. அடியில் வரும் திருமந்திர வசனம் இங்கு கவனிக்கத்தக்கது.

நானென்றுந் தானென்றும் நாடினேன் சாரவே
தானென்ற நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே.

சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தா
லாற்றரி தாகிய வைந்து மடங்கிடு
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பட சாயுச்சிய மாகும் பதியே.   —திருமூலர்.

ஸமாதி பாதம் முற்றிற்று.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

# யோகசூத்திரம்.

## 2-வது ஸாதந பாதம்.

1. தப: ஸ்வாத்யாயேச்வரப்ரணிதாநாநி க்ரியாயோக:

**தபஸ், ஸ்வாத்தியாயம், ஈச்வரப்பிரணிதானம் இவை கிரியாயோகம்.**

குறிப்பு :—முந்திய அத்தியாயத்தில், எவன் மனம் ஒழிவையடைந்து, அந்தர்முகப்பட்டு சமாதியில் சேர்க்கையுள்ளதோ, அவனுக்குப் பயன்படும்படியாக யோகம் சொல்லப்பட்டது. எவன் மனம் அந்தர்முகப்படாமல், வெளி விஷயங்களில் பிரவிர்த்திக்கின்றதோ அவனும் யோகியாக ஆவதற்கு அநுகூலமான ஸாதனங்கள் இந்த அத்தியாயத்தில் சொல்லப்படுகின்றன.

தபஸ் என்றால் தாபத்தை உண்டுபண்ணுதல், அதனால் மனம், மொழி, மெய்யைப் பரிசுத்தப்படுத்தல். மனத்தில் ஏற்படும் அசுத்தியானது வெகுகாலமாய் இருந்து வருகிற கர்ம க்லேசங்களால் நானா விதமாயும் விஷய தாகச்சியில் பிரவிர்த்தியாகும்படியாயும் செய்கிறது. அது தபஸினால் பேதிக்கப்படுகிறது. அதனால் தபஸ் முக்கிய ஸாதனம். சித்தத்தின் பிரஸாதத்தைப் பாதிக்காமல் இத்தபஸ் நிகழவேண்டும். தபஸ் என்றால் காயக்லேசம் எனப் பொருள் பெறும், அத்யந்தமாக ஆகாரமின்மை யோகாப்பியாசத்திற்கு விரோதம். இதனால் மித போஜனம் வேண்டும் என்பது இங்கு குறிக்கப்படுகிறது. அதனால் தான் சித்தத்தின் பிரசாதத்தைப் பாதிக்காமல் என்ற எச்சரிக்கை ஏற்பட்டிருக்கிறது.

ஸ்வாத்தியாயம் யோகத்திற்குச் சாதகமான பிரணவ முதலிய பரிசுத்த மந்திரங்களை ஜபித்தலும், உபநிஷத் முதலிய மோக்ஷ சாஸ்திரத்தைப் படித்தலும் இதில் அடங்கும்.

ஈச்வரப்பிரணிதானம், ப்ர=நன்றாய், நிதானம்=வைத்தல் சகல காரியங்களையும் பரம குருவான ஈச்வரனிடத்தில் அர்ப்பணம் செய்தல்.
அல்லது பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்தல்,

> யத்கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
> யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம் ॥

ஸ்ரீமத் பகவத்கீதை 9-ம் அத். 27-சு.

அல்லது பலாபேக்ஷையின்றிக் கர்மங்களைச் செய்தல்,

6. த்ருக்தர்சநசக்த்யோரேகாத்மதேவாஸ்மிதா ॥

பார்க்கிறகருவி ( திருக் ) பார்க்கும் சக்தியுடனே ஒன்றாய் இருப்பது போல நடைபெறும் நிலைமை அஸ்மிதையாம்.

குறிப்பு:—புருஷனுடைய சக்தி கண் முதலிய ஆறு இந்திரியங்களுடன் சேர்ந்து ஒன்றாய் இருப்பது போலத் தோன்றுதல் அஸ்மிதை. ஆத்மாவான புருஷன் அநாத்மாவான அந்தக்கரணம் முதலியவற்றில், நான் அதாவது ஆத்மா என்றபிமானித்தல் அஸ்மிதை என்பதாம், பார்க்கிறவனுன ஆத்மா பார்வைக்குச் சாதநத்தைத் தான் என்றபிமானித்தல். பார்வைக்குச் சாதனமாவது அந்தக்கரணம் முதலிய இந்திரியங்கள். அந்தக்கரணம் என்பது அகங்காரம், புத்தி, சித்தம், மனஸ், எனப் பிரியும். இவைகளில் அகங்காரம் மூலம். சித்தம் என்பது முன் அநுபவத்தைச் சிந்திப்பது, மனஸ் என்பது பிரகிருதத்தில் விஷயங்களை அறிவது, புத்தி என்பது அவிவேகம் ஏற்பட்டுச் சந்தேகம் வருங்கால் நிர்மாணிப்பது. ஆத்மா எப்போதும் சொரூப பரிணாம மில்லாதவன். அந்தக்கரணம் எப்போதும் பரிணாமமுள்ளது. ஆத்மா சேதனன், அந்தக்கரணம் அநாத்மா, ஜடம். காம கோபம், துக்கம், சந்தோஷம் முதலிய அநுபவங்கள் அடையுங்கால், நான் கோபி, நான் துக்கி, நான் சந்தோஷி என்று சொல்லும்போது அந்தக்கரணத்துடன் சேர்ந்து அப்படி நினைக்கிறோம். ஆத்மா, அந்தக்கரணம் இவைகளின் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தால் கைவல்யம் ஏற்படும். கைவல்யம் என்பது தனிமை, ஆத்மாவும் அந்தக்கரணமும் சம்பந்தப்படாமல் விஷயங்களின் அநுபவம் உண்டாகும். இன்றேல் தன் நிலையில் ஆத்மா இருக்கிறான்.

7. ஸுகாநுசயீ ராக: ॥

ஆசையானது ஸுகத்தை நோக்கியதாக நடைபெறுகிறது.

குறிப்பு:—முன் அநுபவித்த சுகத்தின் ஸ்மரணையால், சுகத்தின்மீது உண்டாகும் ஆசை ராகம் எனப்படும்.

8. து:காநுசயீ த்வேஷ: ॥

வெறுப்பானது துக்கத்தை நோக்கியதாக நடைபெறுகிறது.

குறிப்பு:—முன் அநுபவித்த துக்கத்தின் ஸ்மரணையால், துக்கத்தின்மீது உண்டாகும் வெறுப்பு த்வேஷம் எனப்படும்.

9. ஸ்வரஸவாஹீ விதுஷோ(அ)பி ததா(அ)ரூடோ(அ)பி

நிவேச: ॥

அபிநிவேசம் என்பது ஸ்வபாவமாய் வாஸனாரூபமாக நிகழ்வதாயும் ஸாதாரண மனிதனிடத்தில்போல வித்வானிடமுங்கூட ஸ்திரப்பட்டிருக்கிறதாயுமுள்ள ஒரு பற்று.

**பிரகாசம்**—ஸத்வகுணம் மேலிடுதல்.

**கிரியை**—ரஜோகுணம் மேலிடுதல் சஞ்சலமாக இருத்தல்.

**இருத்தல்**—மேற்கண்ட இரண்டும் இல்லாமல் மோக ஜடமாக மாறாமல் இருத்தல்.

வஸ்துக்கள் குணங்களால் தாரதம்மியப்படுகின்றன. பிரதானமே பஞ்ச தன் மாத்திரைகளாகவும், பூதங்களாகவும் கர்மேந்திரிய ஞானேந்திரியங்களாகவும் புத்தி, சித்தம், மனம், அகங்காரங்களாகவும் பரிணமிக்கின்றது. போகம் அபவர்க்கம், விஷய நுகர்ச்சி, வீடு அல்லது கைவல்யம் இவைகளைப் புருஷனுக்குக் கொடுக்கிறவைகளாக மேற்கண்ட பிரதானத்தின் பரிணாமங்களிருக்கின்றன.

சைவ சித்தாந்தத்தில் சொல்லுகிறபடி தநு, கரண, புவன, போகங்கள், புருஷன் மேன்மேலும் சித்த சுத்தி பெற்றுக் கடை முறையில் வீடுபெற ஏற்பட்டிருக்கின்றன.

**திருசியம்** அல்லது பிரபஞ்சத்தின் பிரயோஜனம் யாது? புருஷன் அநுபவம் பெறுதலின் பொருட்டாம். புருஷன் தன் இயற்கை நிலைமையின் அருமையையும் பெருமையையும் மறந்தான். ஒரு கதை—இந்திரன் ஒரு காலத்தில் பன்றியாக ஆயினான்; தன் பெட்டைப்பன்றியுடனும் குட்டிகளான பரிவாரங்களுடனும் உல்லாசமாகவும் சந்தோஷமாகவும் காலங்கழித்தான். தேவர்கள் இந்திரனின் நிலைமையைக் கண்டு வியப்புற்று "ஓ! பன்றியே! நீவிர் இந்திரனவீர். நீவிர் பன்றியாக உழலுவானேன்?" என்று வினவ, இந்திரனான பன்றி சொன்னதாவது:—"நான் இந்நிலையிலேயே இருக்கட்டும். இது எனக்குச் சுகமாக இருக்கின்றது. தேவலோகம் எனக்கு வேண்டாம்." இதைக் கேட்ட தேவர்கள் வியப்புற்று இன்னவிதம் செய்தால் இந்நிலைமைவிட்டு இந்திரன் திரும்புவார் எனத் தெரியாமல் திகைப்புற்றார்கள். பின்பு ஒவ்வொன்றாகப் பன்றிக்குட்டிகளை அவர்கள் கொல்ல ஆரம்பித்தார்கள். கடைசியில் பெண் பன்றியையும் கொன்றார்கள். எல்லாப் பன்றிக்குட்டிகளும் தன் இல்லப் பிரியாத பெட்டைப்பன்றியும் இறந்த மேல் பன்றி ரூபமான இந்திரன் மிக வியஸனமுற்று 'ஹோ!' என்று கதறி அழுதலே, தேவர்கள் அப்பன்றி சரீரத்தை வெட்டிப் பிளந்தார்கள். அதனின்று திடீரென்று இந்திரன் வெளிவந்து, இது என்ன கனவு! என்று சிரித்தான். இவ்விதம் புருஷன் பிரகிருதியுடன் ஸம்பந்தித்து, அபேத நிலைகொள்ளுகிறான். தேஹோஹம் என்ற பாவனை பெறுகிறான் தன்னுடைய உண்மை நிலையை மறக்கிறான். புருஷனான ஆத்மா உண்மையில் சுத்தனாகவும் அஸங்கனாகவும் இருக்கிறான். பிரபஞ்சமாகிய திருசியத்துடன் புருஷன் சம்பந்தம் பெறுகிறதினால், சுக துக்கங்களுக்குட்பட்டவன் ஆகிறான். இச்சம்பந்தத்தை அநுபவத்தினால் விலக்கிக்கொள்ளுதலின் பொருட்டு யோகசாஸ்திரம் பிரகிர்த்தித்தது (இது விவேகானந்தர் சொல்லியது.)

**19.** விசேஷாவிசேஷலிங்கமாத்ராலிங்காநி குணபர்வாணி ॥

**விசேஷங்கள், அவிசேஷங்கள், லிங்கம், மாத்திரை, அலிங்கம், இவை (சத்வ, ரஜஸ், தமஸ்) என்ற குணங்களின் பரிணாமங்கள்.**

குறிப்பு:—(1) விசேஷங்களாவன—பிருதிவி, அப்பு, தேயுவ், வாயு, ஆகாயம் என்ற 5 மஹா பூதங்களும், 5 கர்மேந்திரியங்களும், 5 ஞானேந்திரியங்களும், மனம் 1, ஆக 16. இவை எப்போதும் மாறிமாறிக் கொண்டிருக்கின்றமையால் ஸாங்கிய சாஸ்திரத்தில் விகாரங்கள் எனப் பெயர் பெறும். இவை பதினாறும் காரியங்களே அல்லாமல் காரணமல்ல.

(2) அவிசேஷங்களாவன :—பஞ்ச தன்மாத்திரைகள், அகங்கார தத்துவம் ஆக 6. இவை புத்தியின் (மஹத்தத்துவத்தின்) காரியங்களாயும், மேற்கண்ட 16 விசேஷங்களுக்குக் காரணமாகவும் இருக்கின்றன. இவை புத்தியின் காரியமாக இருக்கின்றமையால் விகிருதி என்றும், விசேஷங்களுக்குக் காரணமாக இருக்கின்றமையால் பிரகிருதி என்றும், இரண்டு தன்மைகளை உத்தேசித்து பிரகிருதி விகிருதி என்றும் பெயர் பெறும்.

(3) லிங்கம், மஹத்தத்துவம்: மூலப்பிரகிருதியான அலிங்கத்தில் இது லயமடைவதால், இது லிங்கமெனப் பெயர் பெறும்.

(4) அலிங்கம், மூலப் பிரகிருதி, இது லயம் அடையக்கூடியது, பிறிதொன்றுமில்லை. அதனால் இது அலிங்க மென்னப்படும். இது குணங்களுக்குள் தாரதம்மியமில்லாத ஸாம்யாவஸ்தை.

விசேஷங்கள் 16, அவிசேஷங்கள் 6, மஹத்தத்துவம் 1, மூலப்பிரகிருதி 1, ஆக தத்துவங்கள் 24, புருஷன் உள்பட 25.

**20.** [illegible]

பார்க்கிறவன் (புருஷன்) அறிவை (ஞானத்தை) ஸ்வரூபமாக உடையவன் சுத்தன், அதாவது பரிணாமமில்லாதவன். ஆயினும் புத்தி விர்த்தியை அநுசரித்து விஷயங்களைக் கிரஹிக்கிறான்.

குறிப்பு:—(1) புருஷன் சுத்தனாய் இருப்பினும், புத்தியின் விர்த்தி விசேஷங்களில் பிரதிபிம்பிக்கின்றமையால், புத்தியின் சலனங்கள் புருஷனுடையவையாக நினைக்கப்படுகின்றன.

(2) புருஷன் சேதநன். புத்தி அசேதநம். புத்திக்குப் பல்சாமக்கிரியைகள் வேண்டும். அவையாவன, இந்திரியங்கள், விஷயங்கள் முதலியன.

(3) புருஷன் ஸ்வார்த்தன், புத்தி பரார்த்தம், சைதந்யமே புருஷன்.

**21.** [illegible]

திருச்ய வஸ்துவின் ஸ்வரூபம் (இருத்தலானது) அவனுடைய (புருஷனுடைய) பிரயோஜனத்திற்காகவாம்.

அபயம் ஹி வை ப்ரஹ்ம பவதி ய ஏவம் வேத।

பிருஹதாரண்யகோபநிஷத்.

இவை இரண்டின் சேர்ந்த பொருள்: ஆத்மாவை அறிந்தவன் பயமற்ற நிலையைப்பெறுவான்.

vii. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம।
ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி॥—தைத்திரீயோபநிஷத்.

இதன் பொருள்: பிரஹ்மமானது ஸத்ரூபமாயும், சித்ரூபமாயும், முடிவில்லாததாயும் இருக்கிறது. பிரஹ்மத்தை அறிந்தவன் பிரஹ்மமாகவே ஆகிறான்.

**28.** யோகாங்காநுஷ்டாநாதசுத்திக்ஷயே
ஜ்ஞாநதீப்திராவிவேகக்யாதே:॥

யோகாங்கங்களை அநுஷ்டிப்பதினால், மநத்தின் மலம் குறையக் குறைய, புருஷஸாக்ஷாத்காரம் வரையில், ஞானப்பிரகாசமானது மேன்மேலும் உண்டாகிறது.

குறிப்பு:—ஐந்து வகையாயுள்ள (அவித்தை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம்) விபரியயஞானம் யோகாங்கங்களான யமம், நியமம், முதலியவைகளைச் சரியாய் அப்பியஸிப்பதினால் குறைவு படுகிறது. அதன் முடிவில் புருஷ தர்சனம் ஏற்படுகிறது. யோகாங்கங்களை அநுஷ்டித்தால் பிரகிருதி புருஷ விவேக ஞானம் தானே உண்டாகின்றது. அவ்வநுஷ்டானத்தால் மனமலம் நீங்கவே, கேவலஸ்வரூபமான புருஷனின் ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது.

**29.** யமநியமாஸநப்ராணாயாமப்ரத்யாஹாரதாரணாத்யாந
ஸமாதயோऽஷ்டாவங்காநி॥

யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம் தாரணை, தியானம், ஸமாதி என்பன யோகமுறையின் எட்டு அங்கங்களாம்.*

குறிப்பு:—(1) இதில் சொல்லப்பட்டிருக்கிற வரிசையில் முன்னதை அப்பியஸிக்காமல், பின்னதை மாத்திரம் அப்பியஸித்தால் பிரயோஜனமின்று. உதாரணமாக யமம் மாத்திரம் தனித்து அப்பியஸிக்கலாம். யமம் இன்றி, நியமம் முதலியவற்றை அப்பியஸித்தால் பிரயோஜநமுண்டாகாது. அப்படியே யமம், நியமம் இன்றி ஆஸனம் மாத்திரம் பிரயோஜநமின்றாம். அப்படியே பின்னுள்ளவைகளைப்பற்றியும் அறிந்து கொள்க.

*இயம நியமமே யெண்ணிலா வாதன
நயமுறு பிராணாயாமம் ப்ரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறு மட்டாங்க மாவது மாமே.—திருமந்திரம்.

(உ) முதல் பாதத்தில் பிரஸ்தாபித்துள்ள அப்யாஸம், வைராக்கியம், வீரியம், முதலியவை யமம் முதலியவைகளுள் அடங்கும். அப்படியே வேதாந்திகள் சொல்லுகிற விவேகம், வைராக்கியம், ஷட்ஸம்பத்தி, முமுக்ஷுத்துவம் இவைகளும் யமம் முதலியவைகளுள் அடங்கும்.

**30.** [illegible]

அஹிம்ஸை, ஸத்தியம், களவின்மை இந்திரியநிக்கிரஹம், திரவியஅபேக்ஷையின்மை, இவை யமத்தின் ஸ்வரூபங்களாம்.*

குறிப்பு :—அஹிம்ஸை: மனம், வாக்கு, காயத்தால் எவ்விதத்தாலும், எக்காலத்திலும், எப்பிராணிக்கும் ஹிம்ஸை செய்யாதிருத்தல். சத்திய முதலான மற்றையவை அஹிம்ஸை என்ற தர்மத்தைச் சுத்தம் செய்வதற்கும், பூர்த்திபெறச் செய்வதற்கும் ஏற்பட்டவைகளாகும். அஹிம்ஸை என்ற தர்மத்தைப் பரிபாலிக்காமல் மற்றைய தர்மங்களை அநுஷ்டித்தல் பிரயோஜனமில்லை. அஹிம்ஸை என்ற தர்மம் மற்றைய தர்மங்களின் அநுஷ்டானமின்றி பூர்த்திபெறாதாகையால், அவையும் முக்கிய விரதங்களாம்.

ஸத்தியம் :—பிறர் நன்மையின் பொருட்டு, பிரமாணங்களால் அறிந்து, மனத்தால் நினைத்தபடி வாக்கினால் சொல்லுதல். இதைக்கேட்கிறவன் உள்ளபடி அறியும்படியாகச் சொல்லவேண்டும். வஞ்சகமும் கபடமுமுள்ளதாயும், கேட்கிறவன் உள்ளபடி அறியாமலிருக்கும்படியாகவும் மொழிதல் சத்தியமன்று. உண்மையாயிருப்பினும், பிராணிகளுக்கு நன்மை பயக்கக்கூடிய மொழிமாத்திரம் சத்தியமாகும். உண்மையாயிருப்பினும் தீமைபயக்கக்கூடியவை அசத்தியமேயாகும்.

மநுவின் வசனம் இதுவாம்.

[illegible]

இதன் பொருள்: உண்மைபேச, அது பிரியகரமாக இருத்தல் வேண்டும். உண்மையான வார்த்தையாயினும், பிரியமின்றேல், அதைச் சொல்லுதலை தவிர். பிரியமானதென்று பொய்யைப் பேசாதே. இதுவே சாசுவத தர்மம்.

களவின்மை :— பலாத்காரமாகவாவது, ரகசியமாகவாவது பிறர் பொருளை அபகரிக்காமலிருத்தலும், அத்தன்மையான சிந்தனையைத் தவிர்த்தலும் இவை களவின்மையாம்.

இந்திரிய நிக்ரஹம் அல்லது பிரஹ்மசர்யம் :—பிரஹ்ம = வேதத்தை உத்தேசித்து, சர்யம் = நியமங்களை அநுஷ்டித்தல். வேதாத்தியயனம் செய்தலுக்கு, இந்திரிய நிக்கிரஹம் முக்கியமானதால், பிரஹ்மசர்யம் என்றபெயர் இந்திரிய நிக்கிரஹத்திற்கு ஏற்பட்டுவிட்டது.

---

* கொல்லான் பொய்கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லா னியமத் திடையினின் றானே.—திருமந்திரம்.

குறிப்பு :—பரிசுத்தம் செய்துகொள்ளுதல் இருவகைத்து. ஒன்று பாஹ்ய சௌசம், ஜலம் முதலியவைகளால் ஸ்தூல சரீரத்தைச் சுத்தி செய்தல். இரண்டாவது ஆந்தர சௌசம், மைத்ரீ, முதிதா, முதலிய சுத்த பாவங்களால் மனத்தின் மலத்தை நீக்குதல். †

ஸந்தோஷம் : கிடைத்ததை வைத்துத் திருப்தி பெறல்.

தபஸ் : காயக் கிலேசத்திற்குரிய சாந்த்ராயண விரதத்தை அனுஷ்டித்தல். லௌகிக துக்கங்களான த்வந்த்வங்களை ஸஹித்தல். (கீதை 17-ஆம் அத்தியாயத்தில் தபஸின் இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.)

மற்றவைகள் ஸூத்திரத்தின் அர்த்தத்திலேயே விளங்கும்.

33. விதர்கபாதநே ப்ரதிபக்ஷபாவநம்.

(யமநியமங்களுக்கு விருத்தமான ஹிம்ஸை முதலிய சங்கற்பங்களால் தடைகள் நேரிடுமாகில் அச்சங்கற்பங்களின் தோஷங்களை நினைக்கற்பாலது.

34. விதர்கா ஹிம்ஸாதய: க்ருதகாரிதாநுமோதிதா
லோபக்ரோதமோஹபூர்வகா ம்ருதுமத்யாதிமாத்ரா
து:காஜ்ஞாநாநந்தபலா
இதி ப்ரதிபக்ஷபாவநம் ॥

யோகத்திற்குத் தடைகளான ஹிம்ஸை முதலியன, தான் நேரில் செய்தாலும், பிறரைச் செய்யும்படி ஏவினாலும், அதைச்சரி யென்று அநுமோதித்தாலும், (எல்லாம் பாபமே யென்றும்), அவை ஆசையினாலாவது, கோபத்தினாலாவது மோஹத்தினாலாவது உண்டாயினும், அவை அற்பமாயினும், மத்திமமாயினும், அதிகமாயினும் ஏற்பட்டால், அவை முடிவில்லாத் துக்கங்களுக்கும், அறிவில்லாமைக்கும் காரணமாகின்றன எனச்சிந்திக்கத்தக்கவை.

குறிப்பு:—(1) இந்த ஸூத்திரத்தில் யம, நியமங்களுக்கு விரோதிகளான எண்ணங்களின் ஸ்வரூபத்தையும், அவை உண்டாகும் பிரகாரத்தையும், காரணங்களையும், உட்பிரிவுகளையும், அவைகளின் பயன்களையும் விவரித்திருக்கிறார்.

(2) துக்கங்கள் என்றால் துக்கங்களுக்குரிய அநேக ஜன்மங்கள் என்று தாத்பர்யம்.

35. அஹிம்ஸாப்ரதிஷ்டாயாம் தத்ஸந்நிதௌ வைரத்யாக: ॥

அஹிம்ஸை ஸ்திரமாகிப் பூர்ணம் பெறும்போழுது, அந்த யோகியின் முன்னர் பகைமை யொழியும்.

† 1-ஆம் பாதம், 33-ஆம் ஸூத்திரத்தைப் பார்க்க.

அதனால் அவன் மனம் தூய்மை பெறுகிறது. அவித்யையின் பயனாகப் பிறப்பு இன்னதென்பதையும், அதன் பிரகாரத்தையும் (மக்கள், மிருகம், நரர் முதலிய வகை) பிறப்பின் காரணங்களான விஷயசங்கங்களையும் கர்மங்களையும், அதன் பலனான துக்கத்தையும் முடிவான புருஷ ஸாக்ஷாத்காரத்தையும் [illegible] அறிகிறான்.

40. [illegible]

சௌசம் (சுத்தம்) பூர்ணமாக ஏற்படவே தன் அவயவங்களில் அருவருப்பும், பிறருடன் சேராமலிருத்தலும் உண்டாகின்றன

குறிப்பு :—இனி நியமங்களின் ஸித்திகளைச் சொல்லுகிறார். தன் சரீரத்தை அழுக்கு உள்ளும் புறமும் சுத்தி செய்து வரவே அதன் ஆராய்ச்சி ஏற்படுகிறது. அதன் தன்மை அசுத்தமென அறிகிறான். அதனால் சரீரத்தின் மேலுள்ள அபிமானம் விட்டு விலகுகிறது. பிறர் சரீரங்களோடு சேர்வதிலும் அருவருப்பு உண்டாகிறது.

41. [illegible]
[illegible]

அதனால் (சௌசத்தின் ஸித்தியால்) மனம் சுத்தம் பெறுதலும் அதனால் மைத்ரபாவமும், அதனால் மனம் ஒருமைப்படுதலும், அதனால் இந்திரிய ஜயமும், முடிவில் ஆத்ம ஸாக்ஷாத்காரம் பெறுதலுக்குரிய தகைமையை அடைதலும் ஏற்படுகின்றன.

42. [illegible]

ஸந்தோஷம் என்ற நியமம் ஸித்தி பெறுதலினால் உன்னதமுள்ள ஸுகம் உண்டாகும்.

குறிப்பு :—எல்லா விஷய சுகங்களையும் அநுபவித்தலால் ஏற்படும் ஸந்தோஷத்தைப் பார்க்கிலும், அவைகளில் விருப்பு வெறுப்பு என்ற பற்றில்லாமல் இருத்தலினால் ஏற்படும் மனத்திருப்தி மிகவும் உயர்தரமுடையது. தைத்திரீய உபநிஷத்தின், ஆனந்த மீமாம்ஸையில் இந்தப் பற்றில்லாமை, [illegible], [illegible] முறையில் பிரம்மானந்தத்தைக் கொடுக்கும் என்று உபதேசமுள்ளது.

43. [illegible]

தபஸ்ஸினால் அசுத்தம் நசித்துப்போகிறது. அதன் பயனாகச் சரீரத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஸித்திகள் ஏற்படுகின்றன.

குறிப்பு:—சித்திகள். அணிமா முதலான * 8 ஸித்திகளும், இந்திரியங்களுக்கு லோகாந்தரத்திலும், தேசாந்தரத்திலும், காலாந்தரத்திலும் நேரிடும் விஷயங்களைப் பார்த்தல், கேட்டல் முதலிய ஸித்திகளும் உண்டாகும்.

**44.** ஸ்வாத்யாயாதிஷ்டதேவதாஸம்ப்ரயோக:॥

சாஸ்திரங்களை அப்பியஸிக்கிறதினால், இஷ்ட தேவதையுடைய ஸாந்நித்தியம் உண்டாகிறது.

குறிப்பு:—மந்திர ஜபத்தினால் மந்திர அதிஷ்டான தேவர்கள், மந்த்ரத்தைக் கண்டுபிடித்த ரிஷிகள், ஸித்த புருஷர்கள் இவர்கள் இவனுக்கு தர்சனத்தைக் கொடுத்து, அநுக்ரஹம் செய்கிறார்கள்.

**45.** ஸமாதிஸித்திரீச்வரப்ரணிதானாத்॥

ஈசுவரனுக்குத் தன்னை அர்ப்பணம் செய்வதால் ஸமாதியின் ஸித்தி ஏற்படுகிறது.

குறிப்பு:—ஈசுவரத் தியானத்தால் ஸமாதி பூர்ணம் பெறுதல் உண்டாகிறது. அதாவது யோகியின் பிரக்ஞை முடிவான விசாலத்தை யடைகிறது. காலதேசங்களின் வரம்பின்றி எல்லாவற்றையும் அறியும் தன்மையைப் பெறுகிறான்.

ஈசுவரத் தியானத்தால், ஸமாதி பூர்ணம் உண்டாகிறது என்பதினால் யமம் முதலியவை வேண்டுவதில்லை என்று அர்த்தமில்லை. யமா முதலியவை மாத்திரம் இருந்து ஈசுவரத் தியானம் இல்லாவிடில் ஸமாதி ஸித்தி உண்டாகாது என்பது பொருள்.

**46.** ஸ்திரஸுகமாஸனம்॥

**ஆஸனம் என்பது ஸ்திரகரமாயும், ஸுககரமாயும் இருத்தலாம்.**

---

* அணிமா — அணுவைப் போலாதல்.
மஹிமா — மிகவும் பருத்தல்.
கரிமா — மிக கனத்தல்.
லகிமா — மிக இலேசாதல்.
பிராப்தி — வேண்டியவை யெல்லாமடைதல்.
பிராகாமியம் — குறைவின்றியிருத்தல்.
ஈசத்துவம் — யாவர்க்கும் தேவனாகுதல்.
வசித்துவம் — யாவரும் வணங்கற்றல்.

குறிப்பு :—ஆஸநம் இருவகைத்து. ஒன்று பாஹ்ய ஆஸநம் வஸ்த்ரம், கருப்பு மான்தோல், தர்ப்பை, கம்பளம் முதலியன இரண்டாவது சாரீர ஆஸநம் பத்மாஸநம், வீராஸநம் பத்ராஸநம், ஸ்வஸ்திகாஸநம், தண்டாஸநம், முதலியன. முந்தியவை சரீரத்திற்குப் புறம்பானவை. பிந்தியவை சரீர அவயவங்களைப் பலவிதமாக அமைத்துக்கொள்ளுதலால் ஏற்படுகின்றவை.

47. ப்ரயத்நசைதில்யாநந்தஸமாபத்திப்யாம் ॥

முயற்சியை தேயும்படி செய்தலாலும், அநந்தன் உபாஸனையாலும் ஆஸந ஜயம் உண்டாகும்.

குறிப்பு :—முயற்சியைத் தேயும்படி செய்தல். என்றால் மனம் மெய் மொழிகளால் ஸாதாரணமாய் உண்டாகும் ப்ரயத்னங்களைத் தவிர்த்து ஒருமுகப்படுத்தல்.

அநந்தன்—ஆதிசேஷன். பூமியைத் தாங்குகிற 1,000 தலைகளையுடைய ஆதிசேஷனை உபாஸனை செய்வதால், ஆஸந ஜயத்தைப் பெறுகிறான். அநந்தன் ஆஸநத்திற்கு அபிமாநியான தேவதை. யோகியானவன் பெரிதான பலமான உலகப்பற்றுக்களை ஜயித்து, அந்தர்முகப்பட்டு, மனத்தை ஒருமுகப்படுத்தி ஸ்திரப்படுத்திக் கொள்ளல் வேண்டும். அந்தர்முகமாய் இழுக்கும் ஆகர்ஷணசக்தி அநந்த ஸர்ப்பமாகப் ப்ரதீகப்படுத்தப்பட்டிருக்கிறது.

48. ததோ த்வந்த்வாநபிகாத: ॥

அதனால், (ஆஸந ஜயத்தினால்) த்வந்த்வங்களின் உபத்திரவம் இன்றாம்.

குறிப்பு :—த்வந்த்வங்கள் = சீதோஷ்ண முதலியவைகள்.

49. தஸ்மிந்ஸதி ச்வாஸப்ரச்வாஸயோர்கதிவிச்சேத:
ப்ராணாயாம: ॥

அதில் (ஆஸந ஜயம் ஏற்படும்போது ச்வாஸத்தின் வரத்துப்போக்கை நிறுத்தல் ப்ராணாயாமமாம்.

குறிப்பு :—(1) ஆஸந ஜயத்தின் மூலம் சரீரம் ஸ்வாதீனம் ஆகிக்கொண்டு வர, ப்ராணாயாமம் செய்தல் இயலும். ப்ராண—ப்ராணனுடைய, ஆயாமம்—நீட்டல்.

ஸாதாரணமாய், உச்வாஸமும், நிச்வாஸமும் நம்முடைய ப்ரயத்னமின்றி யாதொரு தடையுமில்லாமல் விரைவாய் நடைபெறுகிறது. ப்ரயத்னத்தால் அவை அளவுக்குட்பட்டு நடைபெறும்படி செய்தல். அதாவது, உட்கொள்ளும் ச்வாஸத்தை விரைவாய்த் தானே செல்லாமல் தடுத்து நீண்டகாலம் நிகழும்படியாகவும் அவ்விதமே உட்கொண்ட ச்வாஸத்தை வெளியேறாமல் நீண்டகாலம் தங்கும்படி செய்தலும், பின்னர் நிச்வாசமாயே வெளியேறும் ச்வாஸத்தை நீண்டகாலம் நிக

னும், சூரியபேதனமென்றும், பூரகமத்தியில் அது நிற்கும்போது, ஸஹிதகும்பம் அல்லது சகிமுகமென்றும் அக்கி என்றும் பெயர் பெறும்.*

(6) தமிழ் நூல்களில், முக்கியமாக ஔவையாரது ஞானக்குறளில், பிராணாயாமத்திற்கு வாயுதாரணை என்ற பெயர் வழங்குகிறது.

**51.** பாஹ்யாப்யந்தரவிஷயாக்ஷேபீ சதுர்த்த꞉ ॥

நான்காவது, (ரேசகம், பூரகம், கும்பகம் இவைகள் நீங்கலானது) வெளி விஷயம், உள் விஷயமின்றி சம்பவிக்கிறது.

குறிப்பு :—சாதாரண அப்பியாசமி கும்பகம் பண்ணுதல், ரேசக பூரகங்களின் சம்பந்தத்துடன் நிகழ்வது. இங்கே பிரஸ்தாபிக்கப்படுவது கேவல கும்பகம் அதாவது ரேசக பூரகங்களின்றி, நினைத்த மாத்திரத்தில் கும்பகம் செய்தலாம். இது உயர்தர நியமம்.

**52.** ததஃ க்ஷீயதே ப்ரகாசாவரணம் ॥

அதனால் (கேவல கும்பகத்தினால்) பிரகாசத்தை (புத்தியின் தெளிவை) மறைக்கிற திரையானது வரவர நீங்குகிறது.

குறிப்பு :—(1) பிராணாயாமம் செய்து வருகின்ற யோகியின் புத்தியை மறைக்கிற ஆவரண ரூபமான கர்மபந்தமானது வரவரக் குறைவுபடுகிறது. கர்ம பந்தமானது புத்தியில் ராகத்தை அதிகப்படுத்தி, புத்தியின் ஸத்வகுணத்தை மறைத்து, விஷயாதிகளில் பிரவிர்த்திக்கும்படி செய்கிறது. அதனால், புத்தியின் பிரகாசம் (தெளிவு) குறைகிறது. இதுவே இங்கு ஆவரணம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. முறைப்படி பிராணாயாமம் செய்வதினால், இந்த ஆவரணம் வரவர நீங்கி, புத்தி பிரகாசத்தைப் பெறுகிறது.

"பிராணாயாமத்தைவிட உயர்ந்த தபஸ் வேறில்லை. அதனால் சித்த சுத்தி உண்டாகும். அதனால் ஞானப்பிரகாசம் ஏற்படும்." —

பஞ்சசிகாசாரியர்.

(2) எல்லாப் பாபங்களுக்கும் பிராணாயாமம் பிராயச்சித்தமாக விதிக்கப் பெற்றிருக்கிறது. அது சரீரம், இந்திரியங்கள், மனம் இவைகளிலுள்ள தோஷத்தை விலக்கும். எல்லாப் பிராயச்சித்தங்களிலும் பிராணாயாமம் உயர்ந்தது. மற்றைய பிராயச்சித்தங்கள், சரீரம், இந்திரியங்கள் இவைகளைச் சுத்தம் செய்யும்.

---

* இடையிற் கலைகள் ரேசகமாத்திரில்
அடையும் அதனை யறி. —ஔவை குறள்.

அலைகளின் பயனாக, மனம் சுத்தம் பெறும். பிராணாயாமமோ, மனத்தை நேராகச் சுத்தம் செய்யும் இயல்பினது. *

**53.** தாரணாஸு ச யோக்யதா மநஸ꞉ ॥

(பிராணாயாமத்தினால் ஆவரணம் நீங்கவே) மனத்திற்கு தாரணைகளில் (அதாவது பிரத்தியாஹார, தாரணை, தியானம், சமாதிகளில்) தகைமை உண்டாகிறது.

குறிப்பு:—மனத்தை ஒரு இடத்தில் நிறுத்தல் தாரணையாம். விபூதி பாதம் முதல் சூத்திரத்தில் இதன் விவரம் சொல்லப்பட்டிருக்கிறது.

**54.** ஸ்வவிஷயாஸம்ப்ரயோகே சித்தஸ்ய ஸ்வரூபாநுகார
இவேந்த்ரியாணாம் ப்ரத்யாஹார꞉ ॥

பிரத்யாஹாரம் என்பது, இந்திரியங்கள் விஷயங்களுடன் சம்பந்தமில்லாமல் சித்தத்தினுடைய தன்மையை அநுசரிப்பது போல இருத்தலாம்.

குறிப்பு:—பிராணாயாம அப்பியாஸத்தால் ஆவரணம் தொலைந்துபோய், மனம் வைராக்யம் பெற்று புருஷ ஸாக்ஷாத்காரத்தை நோக்கி அபிவிருத்தியுள்ளதாக ஆகின்றது. அந்நிலையில் இந்திரியங்கள் விஷயங்களுடன் சம்பந்திக்காமல் மனத்தையே அநுஸரிக்கின்றன. பிரத்தியாஹாரம்: பிரதி—பிரதிகூலமாக, எதிரிடையாக, ஆஹாரம்=இழுத்துக்கொள்ளுதல் அதாவது இந்திரியங்களை விஷய சம்பந்தங்களினின்று பெயர்த்து, அதற்கெதிரிடையாக மனத்துடன் பொருந்தும்படி செய்தல்.

---

* ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே.

புள்ளினு மிக்க புரவியை மேற்கொண்டாற்
கள்ளுண்ண வேண்டாம் தானே களிதரும்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கு
முள்ளது சொன்னோ முணர்வுடை யோருக்கே.

பிராணன் மனத்தொடும் பேரா தடங்கிப்
பிராண னிருக்கிற் பிறப் பிறப்பில்லை
பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப்
பிராண னடைபேறு பெற்றுண் டீர்கே.

மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே. — திருமந்திரம்.

55. தத: பரமா வச்யதேந்த்ரியாணாம்

அதனால் (பிரத்யாஹாரத்தால்) இந்திரியங்கள் பூர்ணமாய் வசப்பட்டிருக்கும் தன்மை உண்டாகிறது.

குறிப்பு :—(1) வசப்படுத்தல், பூர்ணமாய் (பரமமாய்) வசப்படுத்தல் இவை இரண்டிற்கும் வித்தியாசமுமுண்டு. சப்த முதலிய விஷயங்களை ராகத் துவேஷமின்றி அநுபவித்தல் இந்திரிய ஜயம் என்கிறார்கள் சிலர்.

(2) சாஸ்த்ரங்களில் நிஷேதிக்கப்படாத விஷயங்களை அநுபவித்தல் இந்திரிய ஜயம் என்கிறார்கள் வேறு சிலர்.

(3) விஷயங்களின் வசமாகாமல் ஸ்வேச்சையாக அவைகளை அநுபவித்தல் என்கிறார்கள் மற்றும் சிலர்.

(4) ராகத் துவேஷமில்லாமலும், அவைகளின் பயனாகிய ஸுகதுக்கங்களில்லாமலும் தடஸ்தனாக இருந்து விஷயங்களை அநுபவித்தல் இந்திரிய ஜயம் என்கிறார்கள் இன்னும் சிலர்.

(5) ஏகாக்ரதை பெற்ற மனத்துடன் இந்திரியங்கள் ஒருமைப்பட்டபடியால், விஷயங்கள் தன் முன்னிருந்தாலும் அவைகளைக் கிரகிக்காமலிருந்தால் இந்திரிய ஜயம் என்கிறார் ஜைகீஷவ்ய மகரிஷி.

(6) இந்த ஐந்தாம் அபிப்பிராயத்தைத் தான் பூர்ணமாய் (பரமமாய்) இந்திரியங்களை வசப்படுத்தல் என்கிறார் பகவான் பதஞ்சலியாரும். ஒரு இந்திரியத்தை ஜயித்தால் மற்றைய இந்திரியங்களின் ஜயம் ஏற்படுகிறதில்லை. மனமானது அந்தர்முகப்பட்டு விஷயங்களின் சம்பந்தமின்றி நிரோதம் பெறுங்காலத்தில் எல்லா இந்திரியங்களின் ஜயமும் உண்டாகிறது. இது தான் பரமாவசியம் என மூலத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(7) இந்த பாதத்தில் i. கிரியாயோகம் ii. க்லேசங்கள் iii. கர்மங்களின் பரிபாகம், விபாகங்கள் iv. அவைகளின் பயனான ஹேயம் (துக்கம்) v. துக்கம், துக்கத்தின் காரணம், அதன் நிவர்த்தி உபாயம், அதன் நிவர்த்தி ஆன பின் அதனால் கைவல்யம் இவைகளைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது.

யமம் முதலிய யோக அஷ்டாங்கங்களில் யமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்யாஹாரம் என்ற ஐந்து பஹிரங்க ஸாதனங்களும் இந்த பாதத்திலும், தாரணை, தியானம், ஸமாதி அடுத்த பாதத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஸாதனபாதம் முற்றிற்று.

பகவான் பதஞ்சலி மகரிஷி அருளிச்செய்த

# யோகசூத்திரம்.

---

## 3-வது விபூதிபாதம்.*

---

1\. தேசபந்தச் சித்தஸ்ய தாரணா ॥

தாரணை என்பது மனத்தை (ஒரு குறித்த இடத்தில் கட்டுதலாம்.)

குறிப்பு :— (1) மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், நாபிசக்கரம், ஹிருதய புண்டரீகம், பிரஹ்மரந்த்ர ஜ்யோதிஸ், புருவமத்யம் சரீரத்தில் இவைபோன்ற இடங்களிலாவது அல்லது வெளியிலுள்ள விஷயங்களிலாவது, மனோவிருத்தியை நிறுத்தல் தாரணை எனப்படும். அடியில் கண்ட திருமந்திர வசனம் கவனிக்கத்தக்கது.

> கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
> வீணாத்தண் டூடே வெளியுறத் தானோக்கிக்
> காணாக் கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
> வாணுள் அடைக்கும் வழியது வாமே.

(1) பிராணாயாமத்தினால் வாயுவையும், பிரத்யாஹாரத்தினால் இந்திரியங்களையும் ஜயித்து மனத்தை ஒரு இடத்தில் நிறுத்த முயலவேண்டும். முதலில் பகவானுக்கு எல்லாக் கல்யாணகுணங்களுடன் கூடியதும் பல ஆபரணங்களுடையதுமான ஸ்வரூபத்தைக் கற்பித்து, அதில் நிற்கும் திறமைபெற்ற பின்பு அக்கற்பித்த ஸ்வரூபத்தினின்று ஒவ்வொரு ஆபரணத்தின் குணத்தை ஒன்றின்பின் ஒன்றாய்த் தள்ளி அந்தந்த ஆபரணமின்றியும் அங்கங்கு தனித்தனி குணமின்றியும் முடிவில் ஸ்வரூபத்தில் மனத்தை நிறுத்தவேண்டும். பின்பு அந்தஸ்வரூபத்தினுள் பல அவயவங்களையும் தள்ளி, "நேதி" பண்ணிக்கொண்டே போக, ஒரு நிலையில் ஜ்யோதிர்நிலையை யோகியானவன் காண்பான். அதில் மனம் நிற்கும்படி செய்தபின்பு அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் எல்லாம் ஒன்றாகும் நிலை சித்திக்கும். அதுவே நிர்விகல்ப ஸமாதி ‡ ஸ்ரீமாணிக்கவாசகரின் அடியில் வரும் பாசுரம் இங்கு கவனிக்கத்தக்கது.

---

* ஸம்யமம் எனப்படும் தாரணை முதலிய அந்தரங்க ஸாதனங்களையும் அவைகளால் பிறக்கக்கூடிய ஸித்திகளையும் இந்த அத்தியாயத்தில் பகவான் பதஞ்சலியார் சொல்லுகின்றார்.

> ‡ தரித்த விடலையம் பூதத்தில் வைத்துப்
> பொருத்தமனைப் புரவிக் கரத்திற் போக்கு
> [illegible]
> தரித்தது தாரணை தற்பரத் தோடே—திருமந்திரம்.

இன்பிறனைக்கருளி இருள் கடிந்த
[illegible]
[illegible]
[illegible] பிரிது மற்றின்னே.

இது பஹிஷ்ப்ரபஞ்ச லயசிந்தனையைச் சொல்லுகின்றது.

(3) "கேதி" பண்ணிக்கொண்டு போகும் முறை தன் சம்பந்தமாகவும் வெளிப்ரபஞ்சம் சம்பந்தமாகவும் நிகழும். அதைத்தான் தன் (யோகியின்) சரீர சம்பந்தமான சக்ரங்கள் என்றும், வெளிப்ரபஞ்ச சம்பந்தமாக லோக விஷயங்கள் என்றும் குறிப்பு 1-வது பாராவில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு முறைகளைத்தான் கடோபநிஷத்தின் அடியிற் குறிப்பிட்ட மந்திரங்கள் உபதேசிக்கின்றன.

3-ம் வல்லி 10, 11 மந்திரங்கள் பஹிஷ்ப்ரபஞ்ச லய சிந்தனையையும், 6-ம் வல்லி 7, 8 மந்திரங்கள் அந்தரப்ரபஞ்சமாகிய உள்நோக்கிய லய சிந்தனையாகுமாம் என்று அறிக.

2. தத்ர ப்ரத்யயைகதாநதா த்யாநம்.

அதில் அவ்விதம் மனம் ஒரு இடத்தில் கட்டுண்டு இருப்பதில் மனம் ஒரே வ்ருத்திரூபமாக இருத்தல் தியானமாம்.

குறிப்பு:—(1) தியானிக்கப்படும் வஸ்துவில் ப்ரவாஹம்போல இடைவிடாது மனத்தை இருக்கும்படி செய்தல் தியானம்.

(2) விஷ்ணு புராணத்தில் கேசித்வஜனுக்கும் காண்டிக்ய ஜநகருக்கும் நடந்த ஸம்வாதத்தில் இவ்வாறும் விஷயமுள்ளது.

பலவாறுள்ள வ்ருத்திகளைத் தள்ளி ஒரு லக்ஷ்யத்தில் நிகழும் ஏகரூபமான வ்ருத்தி ப்ரவாஹம் தியானமாகும். முற்கூறிய யமம் முதலிய அங்கங்கள் அநுஷ்டிக்கப்பட்டால் தான் புத்தி ஏகாக்ரதை பெற்று தியானத்திற்கு யோக்யமாக அமையும்.

(3) ப்ரத்யாஹாரம்— இந்த்ரியங்களை ஜயித்தல். தாரணை —ஒரு லக்ஷ்யத்தில் சொற்ப காலம் மனத்தை நிறுத்தல். தியானம் என்பது ஒரு லக்ஷ்யத்தின் மனத்தை தீர்க்ககாலம் நிறுத்தல். ஸமாதி, தான் நினைத்தபடி 10 நாள், ஒரு மாதம், ஒரு வருஷம் மனத்தை நிறுத்தல். இவ்வாறு விக்ஞாநபிக்ஷு என்பவரின் அபிப்ராயம்.

(4) தியானம் பயன்படவேண்டுமானால், குறித்த காலம், குறித்த இடம், குறித்த முறை இவை மாறாமல் நித்தியம் நேர்மையாய்ச் செய்தல் வேண்டும். ஒரு நாள் ஒரு இடத்திலும் ஒரு காலத்திலும் ஒரு முறையாகவும் மறுநாள் இவைகளை மாற்றுதலும் அல்லது தியானம் செய்யாமல் இருத்தலும், வேறு ஒரு நாள் அவகாசம் அதிகம் உளது என எண்ணி அதிக காலம் தியானித்தலும் பயன்படாவாம். ஆனால் தியானம் நிகழும் காலத்தைச் சிறுகச் சிறுக அதிகப்படுத்திக் கொண்டு போதல் நலம் தரும்.

3. ததே³வார்த²மாத்ரநிர்பா⁴ஸம்
ஸ்வரூபஶூந்யமிவ ஸமாதி⁴:॥

**அந்த தியானமே, வஸ்து ஸ்வரூபமாக மாத்திரம் தோன்றுவதாயும் தன் ஸ்வரூபம் இல்லாததுபோலும் நிகழ்கின்ற மனத்தின் நிலை ஸமாதி எனப் பெயர் பெறும்.**

குறிப்பு:—(1) ஸ்வரூபஶூந்யமிவ = ஸ்வரூப சூன்யம்போல்: *தியானம், தியானிக்கிறவன் என்ற ஸ்வரூபங்கள் உள்ளன. அவை அழிவதில்லை. ஆனால் தியானிக்கிறவனுடைய அறிவு இன்றாம் என்பது கருத்து. நிர்மலமான ஸ்படிகம் அதன் சமீபத்திலுள்ள செம்பாருத்திப் புஷ்பத்தின் ரூபமாக அதாவது சிவப்பாகத் தோன்றுவதுபோல நிர்மலமான மனம் அது இலக்ஷிக்கிற வஸ்து ரூபமாக இருப்பதாகத் தோன்றலாம்.*

(2) *தாரணையில் பல விஷயங்களைத் தவிர்த்து, ஒரு வஸ்துவில் மனம் கட்டுப் படுகிறது. தியானம், ஒரே வஸ்துவை திரிபுடியுடன் சிந்திக்கல். ஸமாதி திரிபுடி அற்று த்யேய ரூபமாக (வஸ்து ரூபமாக) மனம் ஆகுதலாம். ஆரம்பத்தில் மனம் இருத்தல் ஸம்ப்ரக்ஞாத ஸமாதி. த்யேய வஸ்துவின் ரூபம் கூட இல்லாமல் மனம் இருத்தல் அஸம்ப்ரக்ஞாத ஸமாதியாம். இவ்விதமான தாரதம்யங்கள் அறியத் தக்கன.**

4. த்ரயமேகத்ர ஸம்யம:॥

**மேற்கண்ட மூன்றும் (தாரணை, தியானம், ஸமாதி) ஒருங்காக ஸம்யமம் என்று சொல்லப்பெறும்.**

குறிப்பு:—ஸம்யமம்:— *மனத்தை நன்றாய் அடக்குதல்.*

5. தஜ்ஜயாத் ப்ரஜ்ஞாலோக:॥

**அதை (ஸம்யமத்தை) ஜயிப்பதால் பிரக்ஞைக்குப் பிரகாசம் உண்டாகிறது.**

குறிப்பு:—*எவ்வளவுக் கெவ்வளவு ஸம்யமம் ஸ்திரப்படுகிறதோ, அவ்வள வுக்கவ்வளவு பிராந்தி ஸம்சயங்கள் நிவிர்த்தியாகி ஸமாதி பிரக்ஞை நிர்மலமாகிறது.*

6. தஸ்ய பூ⁴மிஷு விநியோக³:॥

**அந்த நிர்மல பிரக்ஞை (உயர்) பூமிகளில் (ஏறுவதற்கு) பிரயோஜனமானது.**

---

* மன்மனம் எங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே
என்ற திருமந்திரம் இங்கு கவனிக்கத்தக்கது

குறிப்பு :— இயமம், நியமம் முதலிய ஐந்தும் சரீரம், பிராணன், இந்திரியம், மனம் இவைகளின் மலங்களை விலக்குகின்றன. தாரணை முதலிய மூன்றும் ஸ்வரூப ஞானத்திற்கு ஸாக்ஷாத்தாக உதவுகின்றமையால் அந்தரங்கமெனச் சொல்லப்படு கின்றன.

8. ததபி பஹிரங்கம் நிர்பீஜஸ்ய ॥

இவை மூன்றும் கூட, நிர்பீஜ ஸமாதிக்கு ( அஸம்ப்ரக்ஞாத ஸமாதிக்கு ) வெளிப்படையான ஸாதனங்களாம்.

குறிப்பு : (1) தாரணை முதலியவை ஒடுங்கிய நிலையே அஸம்ப்ரக்ஞாத ஸமாதியாகும். இந்நிலையில் தாரணை முதலியவை இல்லாமற் போகின்றன. ஆதலால் இவை பஹிரங்க ( வெளிப்படையான ) சாதனங்கள் எனச் சொல்லப்படு சொல்லப்படுகின்றன.

(2) தாரணை முதலியவை பாதிதானும் ஒரு சித்தியுடன் திகழ்வது. இவை மூன்றின் அப்யாஸத்தினால் ஸம்ப்ரக்ஞாத ஸமாதியின் மேன்மையை யோகி அடைகிறான். பரவைராக்யம் என்ற பிரக்ஞா ப்ரஸாதத்தைப் பெறுகிறான். இத னால் அஸம்ப்ரக்ஞாத ஸமாதிக்கு அர்ஹனாகிறான். தாரணை முதலியவை பிரக்ஞா ப்ரஸாதத்தை உண்டுபண்ணுகிறதே தவிர ஸாக்ஷாத்தாக அஸம்ப்ரக்ஞாத ஸமா தியை உண்டுபண்ணுகிறதில்லை.

9. வ்யுத்தானநிரோதஸம்ஸ்காரயோரபிபவப்ராதுர்பாவௌ
நிரோதக்ஷணசித்தான்வயோ நிரோதபரிணாம: ॥

பஹிர்முகமான வாஸனைகள் அவைகளைத்தடுக்கின்ற வாஸனைகள், இவை கள் முறையே குறைதலும் விருத்தி பெறுதலும் ( ஏற்படுங்காலத்தில் ) நிரோதம் என்ற பூமியில் மனம் இடையறாது நிற்கும். அது நிரோத பரிணாமம் ( நிரோத விருத்தியாக மனம் மாற்றம் பெறுதல் ) எனப் பெயர் பெறும்.

குறிப்பு :— (1) புருஷன் அசலன், குணம், குணகாரியம் எல்லாம் சலன முள்ளவை. குணகாரியமான மனமும் சலனமுள்ளதினால், அஸம்ப்ரக்ஞாத ஸமா தியிற்கூட மனம் சலனமுற்றிருக்கும். அதாவது பரிணாமம் பெற்று நிகழும். அந்நிலையில் உள்ள பரிணாமம் எத்தன்மையது என்பதை இச்சூத்திரம் விளக்கு கின்றது.

(2) வ்யுத்தானம் என்பது மனம் பஹிர்முகப்படுதல். இந்த இடத்தில் அஸம்ப்ரக்ஞாத ஸமாதியை நோக்க, ஸம்ப்ரக்ஞாதமானது பஹிர்முகமாக இருத்த லால், வ்யுத்தானம் என்பது ஸம்ப்ரக்ஞாத ஸமாதியைக் குறிக்கிறது. நிரோதம் என்பது பரவைராக்யம். இஃது ஏற்படுதல் அஸம்ப்ரக்ஞாத ஸமாதி நிலையாம்.

10. தஸ்ய ப்ரசாந்தவாஹிதா ஸம்ஸ்காராத் ॥

அதற்கு ( அந்நிலையிலுள்ள மனத்திற்கு ) மேற்படி நிரோத ஸம்ஸ்கார அப்பி யாசத்தினால், சாந்தநிலை பிரவாகமாக ஏற்படுகிறது.

குறிப்பு :—பிரவாகம் = இடையறாமல் இருத்தல். வ்யுத்தான ஸம்ஸ்காரம் குறைவுபடவும் நிரோத ஸம்ஸ்காரம் அதிகப்படுத்தலும் இச்சூத்திரம் விளக்குகின்றது.

**11.** [illegible]

[illegible] ॥

எல்லா வஸ்துக்களையும் பற்றிச் செல்லும் மனத்தின் தன்மை குறையவும், ஐகாக்ரியம் பெறும் தன்மை விருத்தியாகவும் மனம் ஸமாதி நிலையைப் பெறுகிறது.

குறிப்பு :— இது ஸம்ப்ரக்ஞாத ஸமாதியைப் பற்றியது. மனத்திற்கு இரண்டு தன்மைகள் உண்டு. ஒன்று எல்லா வஸ்துக்களையும் கிரகிக்கும் தன்மை. மற்றது ஒரே வஸ்துவினிடம் ஒருமுகப்பட்டிருக்கும் தன்மை. இவைகளில் முன்னது ஸாதாரணமாய் நடைபெறுகிறது. பின்னது குப்தமாக இருக்கிறது. முன்னதை அடக்கி, அல்லது குறைப்பண்ணிப் பின்னதை வெளிப்படுத்தி விருத்தி செய்தால், ஸமாதி கைகூடும். இதுவே மனம் ஐகாக்ரியம் பெறும் நெறி.

**12.** [illegible]

[illegible] ॥

பிறகு ( விக்ஷேபவிர்த்தி குறைந்த பிறகு ) மறுபடி சித்தத்தின் சென்ற விர்த்தியும், நிகழும் விர்த்தியும் ஒரே ரூபமாக இருந்தால், மனம் ஏகாக்கிர நிலையைப் பெறும்.

குறிப்பு :— (1) ஒரே வஸ்துவைப் பார்ப்பதில் அவ்வஸ்துவின் பல பாகங்களைப் பார்த்தால் வித்தியாஸமான விஷயங்கள் மனத்தில் உண்டாகின்றன. அப்படியின்றி ஒரு வஸ்துவின் ஒரே பாகத்தை அல்லது அதன் ஒரே விஷயத்தை மனத்தில் நிறுத்தி அவ்விர்த்தி ரூபமாக மனம் நிற்கும் நிலை மனத்தின் ஒருமுகப்பட்ட நிலை. இந்நிலையில் காலங்கழித்தல் தோன்றாது. எவ்வளவுக் கெவ்வளவு கால நிகழ்ச்சி பிரக்ஞைக்கு வராமல் இருக்கின்றதோ அவ்வளவுக் கவ்வளவு மனத்தின் ஏகாக்கிர நிலை உறுதிப்பட்டதென்பதற்கு அறிகுறியாம். ஸாதாரணமாய் ஏதேனும் ஒரு விஷயத்தைப்பற்றிய சிந்தனை நீடித்து நிகழுமாகில் அப்போது கால நிகழ்ச்சி தோன்றாமல் இருக்கின்றமையைக் காண்கின்றோம். எவ்வளவு காலம் கழிந்துவிட்டது என்று சமயம் ஆச்சரியமாகக் காண்கின்றோம். இச்சூத்திரத்தில் அத்தன்மையான நிலையைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. விர்த்தியின் பிரவாகம் ஒரே தன்மையாக நிகழற்பாலது என்பது இச்சூத்திரத்தின் தேர்ந்த பொருள்.

(2) முன் சூத்திரத்தில் ஸமாதிநிலையைப்பெற முயலுகின்ற மனத்தின் நிலையையும், இச்சூத்திரத்தில் ஸமாதி நிலையைப் பெற்ற மனத்தின் நிலையையும் சொல்லுகிறார்.

**13.** [illegible]

[illegible] ॥

இதனால் முன் சூத்திரங்களில் மகத்தின் பரிணாமங்களைச் சொல்லிவிட்டபடியால், பூதங்களுடையவும், இந்திரியங்களுடையவும் தர்மம், லக்ஷணம், அவஸ்தை என்ற மூன்று பரிணாமங்கள் தெளிவாய்ச் சொல்லப்பட்டனவாக ஏற்படுகிறது.

குறிப்பு:—ஒவ்வொரு வஸ்துவும், தர்மம், தர்மி என இருபான்மையதாக நினைக்கற்பாலது. தர்மத்தை உத்தேசிக்க, தர்மி நிலையுள்ளதாகவும், தர்மம் நிலையில்லாததாகவும் இருக்கின்றன. வஸ்துவில் உண்மையான நிலை ஸ்திரமானதாக இருக்கின்றமையால், அது கூடஸ்த தன்மையை உடையது என்று சொல்லப்படுகின்றது. தர்மங்களோ மாறிமாறிக்கொண்டிருக்கும் தன்மையனவாகையால் அவைகள் பரிணாமங்கள் எனச் சொல்லப்படுகின்றன. இப்பரிணாமங்கள் மூப்பான்மையன தர்மம், லக்ஷணம், அவஸ்தை என்பனவாம்.

**தர்மம்** என்பது வஸ்துவை நோக்கும் காலத்தில் அதன்கண்முன்னுள்ள ஒரு குணத்தின் நிலைமை வெளிப்படுதல்.

**அவஸ்தை:** அந்நிலைமை விருத்தியடைதலும் அல்லது குறைதலும்.

**லக்ஷணம்:** ஒரு குணம் அல்லது தர்மம் நிகழும் காலத்தில் மற்றைய தர்மங்கள் சென்றிருக்கலாம் இனிமேல் வரலாம். இதில் காலவித்தியாசம் ஏற்படும்.

உதாரணமாக அந்தக்கரணம் என்பது தர்மி, அதன்கண் வ்யுத்தானம், நிரோதம், ஏகாக்கிரம் என்ற மூன்று தர்மங்கள் ஏற்படுகின்றன. ஒரு தர்மம் நிகழுங் காலத்தில் மற்றைய இரண்டும் அநாகதமாகவும் அல்லது அதீதமாகவும் இரண்டில் ஒன்று அதீதமாகவும் (சென்று போனதாகவும்), மற்றொன்று அநாகதமாகவும் (இனி வரப்போகின்றதாகவும்) இருக்கின்றன. அந்தக்கரணத்தை உத்தேசித்து நிகழும் குணம் தர்மபரிணாமம் என்றும், சென்று போனதை அல்லது வரப்போகின்றதை உத்தேசித்தது லக்ஷண பரிணாமம் என்றும், நிகழும் தர்மம் விருத்தியடைந்தாலும் குறைந்தாலும் அது அவஸ்தாபரிணாமம் என்றும் சொல்லப்படுகின்றன. இவ்விதமே பூதங்களிலும் இந்திரியங்களிலும் இந்த மூன்று பரிணாமங்களும் ஏற்படுகின்றன. தர்மம் ஒரு குணம் வெளித்தோன்றல். அவஸ்தை என்பது அதுவே விருத்திப்படுதல் அல்லது குறைவுபடுதல். லக்ஷணம் என்பது ஒரு குணம் வர்த்தமானத்தில் நிகழ்தல், ஒரு குணம் முன்னமேயே நிகழ்ந்தது, ஒரு குணம் இனி நிகழப்போகின்றது என்பதாம். இவைகளே முறையே ஆங்கில நூல்களில் Cousality (காரண காரியபரம்பரை), Space (தேசம்), time (காலம்) என மூன்றுகச் சொல்லப்படுகின்றன. தர்மம், தர்மி என்ற சம்பந்தமானது எப்போதும் ஒரே நிலையுள்ளதன்று. ஒரு தர்மத்தை நோக்க, மற்றொன்று தர்மியாக இருக்கலாம். அந்தத் தர்மியே வேறொன்றை நோக்க தர்மமாக அமையும். தர்மி, தர்மம் என்ற பரம்பரை, காரணகாரியப் பிரவாகத்தில் உள்ளே நோக்கிச் செல்லச்செல்ல கடைமுறையில் மூலப்பிரகிருதி தர்மியாக முடியும். இது சாங்கிய சாஸ்திரத்தின் துணிபு. அத்வைத சாஸ்திரத்தில் கடைமுறையிலுள்ள மூலப்பிரகிருதியான தர்மியே அநிர்வசநீயமான ஈசுவர சக்தி அல்லது மாயை என்ற தர்மமாக ஏற்படும். சிலர் அபிப்பிராயத்தில் தர்மங்களுடைய தொகுதியைத்தவிர தர்மி என்பது தனித்து வேறாக ஒன்றுமில்லை என்பதாம்.

14. [illegible]

தர்மீ என்பது சாந்தம், உதிதம், அவ்யபதேசியம் என்ற தர்மங்களில் நுழைந்துள்ள தொடர்பான வஸ்துவாம்.

குறிப்பு:—சாந்தம் = அடங்கிப்போன, சென்றுபோன. உதிதம் = உற்பத்தியாகின்ற, நிகழ்கின்ற, அவ்யபதேசியம் = சொல்லமுடியாத, சூக்ஷ்மமான காரண ரூபமாயுள்ள, இனிவெளியாகக்கூடிய இனி வரப்போகின்ற. மேலும் அவ்யபதேசியம் என்ற வார்த்தை இன்ன காரணத்தினின்று இன்ன காரியம் உண்டாகும் என்பதைச் சொல்லக்கூடாமையைத் தெரிவிக்கும் பொருட்டு உபயோகிக்கப்பட்டிருக்கிறது. "[illegible]" என்ற தைத்திரீயோபநிஷத் வசனத்தை அநுசரித்து எல்லாக் காரணமும் எல்லாக் காரியமாகவும் ஆகலாம் என்பது பாஷ்யகாரரான வியாஸ ரிஷியின் அபிப்பிராயம்.

அதனால் நீர், நிலம், சீதம், உஷ்ணம் முதலானவைகளின் பரிணாமத்தால், தேச காலங்களை அநுசரித்து, காரண ரூபமான பீஜத்தில் இருக்கின்ற சிற்சில சக்திகள் விசித்திரமான இலை, மலர், காய், கனிகளாக வெளிப்படுகின்றன. இவைகளைத் தவிர, வெளிப்படாத சக்திகள் அநேகம் குப்தமாயிருக்கின்றன. ஒவ்வொரு காரணத்திலும் எல்லாக் காரியங்களும் உள்ளன. ஆனால் அவை வெளிப்படுதல் கால தேச வர்த்தமானங்களைப் பொறுத்ததாக இருக்கிறது. அநேக சக்திகள் வெளிப்படாமைக்கு அநேக தடைகள் இருக்கின்றன. அத்தடைகளை விலக்கினோமாகில், அச்சக்திகள் விளக்கப்படும். யோகியானவன் அத்தடைகளை விலக்கிக்கொள்ளும் சக்தியை யுடையவனாகையால், எந்தக் காரியத்தையும் எந்தக் காரணத்தினின்றும் உண்டுபண்ணுவான்.

15. [illegible]

தர்மியின்கண் பரிணாமங்கள் வெவ்வேறாக இருத்தலுக்கு ( தர்மியில் தர்மங்கள் ஒன்றின்பின் ஒன்றாய்த் தோன்றும் ) கிரமம் வெவ்வேறாக இருத்தல் காரணமாம்.

குறிப்பு:—(1) உதாரணமாக, மண் ஒன்றே பொடியாகவும், பிண்டமாகவும், கடமாகவும் இருக்கிறது. "மண் ஒன்று தான் பல நற்கலமாயிடும்" என்ற திருமந்திர வசனம் இங்கு கவனிக்கத்தக்கது. பல மாற்றங்கள் இருந்தாலும் தர்மியாகிய மண் ஒன்றே என்று அறிக. தர்மங்களைத் தவிர, தர்மி என்பதாக வேறு ஒன்று இல்லை என்னும் பக்ஷத்தில், ஒவ்வொரு பரிணாமமும் உண்டாகும் காலத்தில் மண் என்ற ஞானம் வாராமல் போம். அநுபவத்தில் அப்படியன்று. மண் என்ற ஞானம் உள்ளது. இப்பரிணாமங்கள் ஒன்றின் பின் ஒன்றாய்த் தோன்றுமிடத்தில் ஒரு பரிணாமம் தர்மியாகவும் மற்றொன்று தர்மமாகவும் ஏற்படுகிறது. கடத்தினை நோக்க, மண் தர்மி. ஜலத்தை நோக்க மண் தர்மம் ஜலம் தர்மி. இவ்விதமே தேஜஸ், வாயு, ஆகாசம் பஞ்ச தன்மாத்திரைகள், பூதாதி, அகங்காரம், மஹத்தத்துவம், மூலப்பிரகிருதிவரை ஆராய்ச்சி செய்யின், கீழானது தர்மமாகவும், மேலானது தர்மியாகவும் கடை முறையில், மூலப்பிரகிருதி தான் பரமதர்மியாகவும் ஏற்படும். இது சாங்கியர்களின் சித்தாந்தம். புருஷனைத் தவிர, மற்றெல்லா வஸ்துக்களும் ஒவ்

ஒரே சப்தமும் வாக்யமும் ஒரே அர்த்தத்தை மாத்திரம் கொடுக்கின்றன. அப்படி ஸங்கேதத்தினால் ஏற்படும் அர்த்தத்தைத் தவிர்த்து, ஸர்வஸாதாரணமான சப்தத்தில் ஸம்யமம் செய்வதினால், சூத்திரத்தில் கண்டபடி எல்லாப் பிராணிகளின் சப்தத்தையும், அதாவது பாஷையை அறியும் தன்மை உண்டாகும். அதாவது அந்தந்தப் பிராணிகளின் மனதில் உண்டாகும் அர்த்தத்துடன் சப்தத்தை அறிய இயலும். இன்ன சப்தம் இன்ன பிராணியினுடையது என்பதை சாதாரணப் பழக்கத்தில் யாரும் அறிதல் கூடும். அதற்கு யோகாப்பியாஸம் வேண்டியதில்லை.

**18.** ஸம்ஸ்காரஸாக்ஷாத்கரணாத் பூர்வஜாதிஜ்ஞானம் ॥

**ஸம்ஸ்காரத்தை ஸம்யமம் செய்வதினால் பூர்வ ஜன்மத்தின் ஞானம் உண்டாகிறது.**

**குறிப்பு:**—(1) ஸம்ஸ்காரம் இருவிதம். i. ஜாதி, ஆயுள், போகம் இவைகளுக்குக் காரணமான முன் ஜன்மங்களில் செய்யப்பட்ட தர்மாதர்மங்கள் ii. ஸ்மரணத்திற்கும் க்லேசத்திற்கும் காரணமாயிருக்கும் வாஸனைகள்.

ஒரு ஸம்ஸ்காரத்தை ஸம்யமம் செய்தலென்றால், தேச, கால, காரணம் இவைகளுடன் சம்பந்தித்து ஸம்யமம் செய்தல். அவ்விதம் செய்தால் பூர்வ ஜன்மத்தின் ஞானம் உண்டாகும்.

(2) ஒரு கதை:—**ஜைகீஷவ்யர்** என்ற ஒரு ரிஷி இருந்தார். அவர் மஹா யோகி. பூர்வம் 10 மஹாப்ரளயங்களில் தான் இருந்த ஜன்மங்களைத் தொடர்பாய் அறிந்தவர். **ஆவட்யர்** என்ற வேறொரு ரிஷி அடியில் வருமாறு அவரை வினவினார்:— "அடிக்கடி ஜனனம் எடுத்ததினால் துக்கம் ஏற்படுமோ? பல பிறப்புகளாகப் பிறந்ததினால் துக்கம் உண்டாயிருக்குமோ? நரகவாதனைகள் என்ன? ஸ்வர்க்காநுபவங்கள் என்ன? மனிதனாகப் பிறந்ததில் துக்கம் அதிகமா; சுகம் அதிகமா?" **ஜைகீஷவ்யர்** அடியில் வருமாறு மறுமொழி சொன்னார்:- "எல்லாம் துக்கமாகவே இருக்கின்றன. சுகம் இல்லை." ஆனால், ப்ரக்ருதி லயம் என்பதைச் செய்வதினால் ஏற்படும் சந்தோஷமும் அந்த துக்கத்தில் சேருமோ என்று ஆவட்யர் திரும்ப வினவினார். விஷய சுகத்தை உத்தேசிக்க, இந்த ப்ரக்ருதி லயத்தால் உண்டாகும் சந்தோஷம் உயர்வாக இருப்பினும், கைவல்யத்தை உத்தேசிக்க, இந்த சந்தோஷம் குணத்ரயங்களின் காரியமானபடியால் துக்கமே. இதில் த்ருஷ்ணா தந்து (ஆசையின் நூலின் தொடர்) இருக்கின்றபடியால் அதுவும் நீக்கவேண்டும். அப்போதுதான் சுத்த கைவல்யம் ஏற்படும் என மறுமொழி கூறினார்.

**19.** ப்ரத்யயஸ்ய பரசித்தஜ்ஞானம் ॥

**விருத்திகளை ஸம்யமம் செய்வதினால் பிறர் மனதில் உண்டாகும் எண்ணங்களை அறியலாம்.**

**குறிப்பு:**—விருத்திகளை ஸம்யமம் செய்தல் என்பது தன்னுடைய அல்லது பிறருடைய விருத்திகளை ஸம்யமம் செய்தல் என அறியவேண்டும். மனம் திரிகுணாத்மகம். அதனால் மனதின் விருத்திப் பிரவாகமானது எல்லாருக்கும் ஒரே

மாதிரியானது. அதனால் ஒரு விர்த்தியை ஸம்யமம் செய்வதால் எல்லாருடைய எண்ணங்களையும் அறியலாகும். அடுத்த சூத்திரம் இதை தெளிவு பண்ணுகிறது.

**20.** 𑌨 𑌚 𑌤𑌤𑍍𑌸𑌾𑌲𑌮𑍍𑌬𑌨𑌂 𑌤𑌸𑍍𑌯𑌾𑌵𑌿𑌷𑌯𑍀𑌭𑍂𑌤𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 ॥

அது (மற்றவனுடைய மனோவிர்த்தியை அறிவதானது) விஷயத்துடன் கூடியதல்ல. இவன் (ஸம்யமம் பண்ணுபவன்) விர்த்தியில் அது இன்மையால்.

குறிப்பு :—ஸம்யமம் பண்ணுபவன் மற்றவனுடைய விர்த்தியில் ஸம்யமம் செய்திருக்கிறானேயல்லாமல், அவ்விர்த்திக்குக் காரணமான விஷயத்தில் ஸம்யமம் செய்கிறானில்லை. அதனால் மற்றவனுடைய விர்த்தியின் வெளி விஷயம் ஸம்யமம் செய்கிறவனுக்கு நேரில் சாதாரணமாய்த் தெரியாது. ஆனால், அவ்விஷயத்தை அறியவேண்டுமென இச்சித்தால் மற்றவன் மனோ விர்த்தியின் ரூபமாய் அவ்விஷயத்தில் ஸம்யமம் செய்தால் கூடும்.

**21.** 𑌕𑌾𑌯𑌰𑍂𑌪𑌸𑌂𑌯𑌮𑌾𑌤𑍍𑌤𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌸𑍍𑌤𑌮𑍍𑌭𑍇 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃
𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑍇𑌽𑌨𑍍𑌤𑌰𑍍𑌧𑌾𑌨𑌮𑍍 ॥

தன் சரீரத்தின் ஸ்வரூபத்தில் ஸம்யமம் செய்தலினால், அதைக் கண்ணிந்திரியத்தினால் கிரஹிக்கக்கூடிய தன்மைக்குத் தடை ஏற்படுத்துவதில் அதனால் பார்க்கிறவன் கண்ணுக்கும் அந்த சரீரத்திற்கும் சம்பந்தம் அற்றுப்போவதால் அச்சரீரத்திற்கு மறைவு (அந்தர்தான சக்தி) உண்டாகிறது.

குறிப்பு:—ரூபத்தை கிரஹிக்கும் சக்தியைத் தடுத்தல்: ஒரு வஸ்துவைப் பார்த்தல் என்றால், அந்த வஸ்துவினின்று ரச்மியின் அலைகள் (Vibrations of ether) வெளிக்கிளம்பிப்போய்ப் பார்க்கும் கண்ணைத் தாக்கி, அக்கண்ணின் நரம்பில் ஒரு ஸம்ஸ்காரத்தை (மாறுதலை) உண்டாக்குகிறது. அதன் காரியமாக மனத்தில் ரூபம் புலப்படுகிறது. தடுத்தல் என்றால் அந்த வஸ்துவினின்று அதன் ரச்மியை வெளிப்போகாமல் செய்தல், நிறுத்திவைத்தல்; இதனால் பார்க்கிறவன் கண் வஸ்துவைப் பார்க்காமல் போகிறது. இவ்விதமே சப்தம், ரஸம், முதலியவைகளில் ஸம்யமம் செய்தலினால், யோகி தான் பேசுகிற வார்த்தைகளையும், தான் அநுபவிக்கும் ரஸத்தையும் மற்றவன் அறியாதபடி செய்து கொள்ளலாம்.

**22.** 𑌸𑍋𑌪𑌕𑍍𑌰𑌮𑌂 𑌨𑌿𑌰𑍁𑌪𑌕𑍍𑌰𑌮𑌂 𑌚 𑌕𑌰𑍍𑌮 𑌤𑌤𑍍𑌸𑌂𑌯𑌮𑌾𑌦𑌪𑌰𑌾𑌨𑍍𑌤
𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌰𑌿𑌷𑍍𑌟𑍇𑌭𑍍𑌯𑍋 𑌵𑌾 ॥

(கர்மங்கள் இருவிதம்) பலனைக் கொடுக்க ஆரம்பித்தவை, பலனைக்கொடுக்க ஆரம்பிக்காதவை. இவைகளில் ஸம்யமம் செய்வதினால் யோகி, மரண காலத்தை அறிகிறான். அவ்விதமே அரிஷ்டங்களின் அறிகுறியாலும் (அம்மரண காலம் தெரியவரும்).

குறிப்பு :—(1) பூர்வஜன்ம கர்மங்கள் இருவகை i. ஸோபக்கிரமம்—பலனைக் கொடுக்க ஆரம்பித்தவை, கன்றாய்ப் பிழிந்த ஈரவஸ்திரம் வெய்யிலில் உலர்

நான்காவது வாயுமயமானது. ஐந்தாவது ஆகாச ரூபமானது. ஆறாவது அதிக இருள் உள்ளது. ஜீவர்கள் இந்த 6 நரகங்களில் தங்களுடைய துஷ்கர்ம பலன்களை அனுபவிக்க வசிக்கிறார்கள்.

iii 7 பாதாள லோகங்கள் உள்ளன:—(1) அதல (2) விதல (3) ஸுதல (4) ரஸாதல (5) மஹாதல (6) தலாதல (7) பாதாள. *பூமி ஒன்றுக்கு ஒன்று அடுக்கடுக்காகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. மஹாமேருவிற்கு வடக்கே (1) ரமணகம் (2) ஹிரண்மயம் (3) உத்தரகுரு. மஹாமேருவிற்குத் தெற்கே (1) நிஷதம் (2) ஹேமகூடம் (3) ஹிமாசலம் என்ற மூன்று மலைகள் இருக்கின்றன. இம்மூன்று மலைகளை அடுத்தடுத்து அதனதன் சார்பில் 3 வர்ஷங்களிருக்கின்றன. அவையாவன:— ஹரிவர்ஷம், கிம்புருஷம், பாரதவர்ஷம். மேருவிற்குக் கிழக்கே பத்ராச்வம் என்று ஒரு வர்ஷமிருக்கின்றது. மால்யவான் என்ற மலை அதன் கிழக்கெல்லை. மேருவுக்கு மேற்கே கேதுமாலம் என்ற வர்ஷம் கந்தமாதன பர்வதம் வரையில் விஸ்தரித்திருக்கிறது. மேருவைச் சுற்றி இளாவர்ஷம் என்பது இருக்கிறது. இந்த 9 வர்ஷங்கள் அடங்கியது ஜம்பூத்வீபம். அதன் நீளம் லக்ஷயோஜனை தூரம். அதன் இரண்டு மடங்கு விஸ்தாரமுள்ள லவண ஸமுத்திரத்தால் அது சூழப்பெற்றிருக்கிறது. மேலும் இன்னும் 6 த்வீபங்களிருக்கின்றன. அவைகளாவன: சாகம், குசம், க்ரௌஞ்சம், சால்மலி, பிலக்ஷம், புஷ்கரம், அவைகள் முறையே கரும்புச்சாறு, கள், நெய், தயிர், பால், சுத்தஜலம் இவைகளாலான ஸமுத்திரங்களால் சூழப்பெற்றிருக்கின்றன. இந்த ஏழு த்வீபங்களும் ‡50 கோடி யோஜனை விஸ்தீர்ணமுள்ளதாக இருக்கின்றன. எல்லாத் த்வீபங்களுமடங்கிய இந்த அண்டமானது மின்மினிப் பூச்சியைப்போன்று மூலப் பிரகிருதியின் ஒரு சிறிய அவயவம். அந்த அண்டத்தில் பாதாளம், ஸமுத்திரம், பர்வதங்கள் இவைகளில் தேவர்கள் வகுப்பில் சேர்ந்த அஸுரர்கள், கந்தர்வர்கள், கின்னரர்கள், கிம்புருஷர்கள், யக்ஷர்கள், ராக்ஷஸர்கள், பூதங்கள், ப்ரேதங்கள், பிசாசங்கள், அபஸ்மாரகர்கள், அப்ஸரஸ்கள், பிரம்மராக்ஷஸர்கள், கூஷ்மாண்டர்கள், விநாயகர்கள், இவர்கள் வாஸம் பண்ணுகிறார்கள். மற்ற இடங்களில் புண்ணியரான தேவ, மனுஷ்யர்கள் வாஸஞ்செய்கிறார்கள். மேரு பர்வதத்தில் தேவர்கள் விளையாடும் தோட்டங்களும் அதில் தேவர்கள் கூடும் ஸபாமண்டபமும் இருக்கின்றன. அதன் பெயர் ஸுதர்மா. ஸுதர்சனம் என்றொரு பட்டணமிருக்கிறது. த்ரிதசர்கள், அக்நிஷ்வாத்தர்கள், யாம்யர்கள், துஷிதர்கள், அபரிநிர்மிதவசவர்த்திகள், பரிநிர்மிதவசவர்த்திகள் ஆகிய இந்த 6 தேவ ஜாதிகள் மஹேந்திர லோகத்தில் வசிக்கிறார்கள். இவர்கள் நினைத்த மாத்திரத்தில் காரியங்கள் செய்கிறவர்கள்.

இவர்கள் அணிமாதி ஐச்வர்யமுள்ளவர்கள். ஒரு கல்பம் வரை ஆயுள் உள்ளவர்கள். காமதுகைச்சியுள்ளவர்கள். ஸங்கல்பத்தினால் மாதாபிதாக்களின் ஸம்பந்தமின்றி சரீரங்களை உண்டுபண்ணிக்கொள்ளுகிறவர்கள். அப்ஸரஸ்திரீகளால் சூழப்பட்டிருக்கிறார்கள்.

மஹர்லோகத்தில் (பிரஜாபதியின் லோகத்தில்) 5 வகை தேவர்கள் இருக்கிறார்கள்: (1) குமுதர்கள் (2) ரிபுக்கள் (3) பிரதர்தனர்கள் (4) அஞ்சனாபர்கள்

---

* இதுவே பூமியின் தாரகம் Axis.

‡ இவைகளைப்பற்றி 'மனிதனின் பிரபஞ்சவளர்ச்சியின் உண்மை' என்ற புஸ்தகத்தைப் பார்க்க.

**29.** 𑌨𑌾𑌭𑌿𑌚𑌕𑍍𑌰𑍇 𑌕𑌾𑌯𑌵𑍍𑌯𑍂𑌹𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍍 ॥

(நம் சரீரத்திலுள்ள) நாபிசக்ரத்தில் ஸம்யமம் செய்வதினால் சரீரத்தின் அமைப்பை அறியலாம்.

குறிப்பு:—*இதுவரை வெளியிலுள்ள விஷயங்களுடைய ஸித்திகளைச் சொன்னார். இனி சரீரத்திற்குள்ளே உள்ள விஷயங்களின் ஸித்திகளைச் சொல்லுகிறார். நாபியானது சரீரத்தின் மத்தியிலிருக்கிறது. அது மேல்கீழாகப் போயிருக்கின்ற வழியால் நாபிசிரந்தி என்று பெயர். சரீரத்தின் அமைப்பு:—தோல், ரத்தம், மாம்ஸம், நரம்புகள் (ஸ்நாயு), அஸ்தி, மஜ்ஜை, வாதம், பித்தம், ஸ்லேஷ்மம், சுக்லம் ஆகிய இப்பத்தும் சரீரத்திலுள்ளன.*

**30.** 𑌕𑌣𑍍𑌠𑌕𑍂𑌪𑍇 𑌕𑍍𑌷𑍁𑌤𑍍𑌪𑌿𑌪𑌾𑌸𑌾𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 ॥

(கண்ட கூபத்தில்) கழுத்திலுள்ள கண்டக் கிணற்றில் ஸம்யமம் செய்வதினால் பசி தாகங்களின் நிவிர்த்தி உண்டாகும்.

**31.** 𑌕𑍂𑌰𑍍𑌮𑌨𑌾𑌡𑍍𑌯𑌾𑌂 𑌸𑍍𑌥𑍈𑌰𑍍𑌯𑌮𑍍 ॥

கூர்ம (ஆமை போன்ற) நாடியில் ஸம்யமம் செய்வதினால் ஸ்திரமான இருப்பைப் பெறலாம்.

குறிப்பு:—*இந்நாடி கழுத்துக்குக் கீழ் மார்பில் உள்ளது. அடையும் ஸ்திரபதம் ஸர்ப்பத்தையும் உடும்பையும் போலுள்ளது. விக்ஞாந பிக்ஷு என்பவர் அபிப்ராயப்படி மண்டலாகாரமாக இருக்கின்ற ஹ்ருதயமே கூர்மாகாரமாக இருக்கின்றது. அதுவே இங்கு சொல்லப்படுகிறது. மற்றவர்கள் அபிப்ராயத்தால் அது வேறு நாடி, ஹ்ருதயமன்று. (ஹ்ருதயத்தைப் பற்றிப் பின்வரும் முப்பத்து நாலாம் சூத்திரம் சொல்லுகிறது.)*

**32.** 𑌮𑍂𑌰𑍍𑌧𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌷𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌦𑌰𑍍𑌶𑌨𑌮𑍍 ॥

சிரஸில் உள்ள ஜ்யோதிஸில் ஸம்யமம் செய்வதினால் ஸித்தர்களை நேரில் பார்க்கலாம்.

குறிப்பு:—*ஸித்தர்கள் பூமிக்கும் அந்தரிக்ஷத்திற்கும் மத்தியிலிருக்கிறார்கள்.*

**33.** 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌭𑌾𑌦𑍍𑌵𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑍍 ॥

பிரதிபிம்பமாய்ப் பிரகாசிப்பதினாலே தான் (வா=வை) எல்லாம் அறியப்படும்.

குறிப்பு:—*முன் சொன்ன ஸம்யமம் எல்லாம், அப்பியாஸி தன் அனுஷ்டானம் சரியா அல்லது பிழையா என்று நிர்ணயித்துக்கொள்ளப் பரீக்ஷை பயனானவையாம். மேற்படியில் இருக்கின்ற யோகியானவன் அந்தக்கரண சுத்தி செய்து*

**36.** 𑌤𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌭𑌶𑍍𑌰𑌾𑌵𑌣𑌵𑍇𑌦𑌨𑌾𑌦𑌰𑍍𑌶𑌾𑌸𑍍𑌵𑌾𑌦𑌵𑌾𑌰𑍍𑌤𑌾 𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 ॥

( மேற்கண்ட முறைப்படி அடைந்த புருஷ ஸாக்ஷாத்காரத்திற்கு ) ப் பிறகு உள்ளறிவினலேயே கேட்டல், ஸ்பரிசித்தல், பார்த்தல், ருசித்தல், நுகர்தல், முதலிய திவ்ய சக்திகளின் விகாஸமும் உண்டாகின்றது.

குறிப்பு :—மேற்கண்ட அப்யாஸ முறையின் பயனுக இந்திரியங்களின் திவ்விய சக்தியும், புத்திக்கு திவ்விய சக்தியும் யோகிக்கு உண்டாகும். எப்போதும் எல்லாம் அவருக்குத் தெரியவரும். உள்ளே நோக்குகின்றமையால் முக்கண் திறக்கும். நினைப்பில்லாமலே சகல விஷயங்களும் அவருக்குப் புலனாகும்.

**37.** 𑌤𑍇 𑌸𑌮𑌾𑌧𑌾𑌵𑍁𑌪𑌸𑌰𑍍𑌗𑌾 𑌵𑍍𑌯𑍁𑌤𑍍𑌥𑌾𑌨𑍇 𑌸𑌿𑌦𑍍𑌧𑌯𑌃 ॥

அவைகள் முன் ( சொல்லியவை ) ஸமாதிக்கு ( அந்தர்முகப்பட்டு புருஷ ஸாக்ஷாத்காரம் பெறுதலில் ) தடைகளாகும். பஹிர்முகமாகச் செல்லுமிடத்து ( உலகவியாபார தசையில் ) அவைகள் ஸித்திகளாகும்.

குறிப்பு :—ஸமாதி என்பது இங்கு அஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்ற அர்த்தத்தது. இந்நிலையில் உள்ளவனுக்கு பிராதிபாதி ஸித்திகள் இடையூறுகளாகும். கைவல்யத்தை நோக்குகிறவன் எந்த ஸித்திகளையும் விரும்பான். எவ்வளவு உயர்வுள்ள ஸித்திகளை யடைந்தாலும் இவன் கிருதகிருத்யனுகமாட்டான். அதாவது செய்யவேண்டிய கார்யத்தைச் செய்தவனுகமாட்டான். அவன் செய்யவேண்டிய வேறு கார்யங்களுள்ளன. இதுவே கீதையில் அடியில் வருமாறு :—

"𑌏𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 ।
𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑌤 ॥"

இதன் பொருள் :—ஒருவன் இதனை அறிந்து, அறிவுள்ளவனுகவும், செய்ய வேண்டியதைச் செய்தவனுகவும் ஆவன்.—கீதை., 15-ம் அத். 20-ம் ச்லோகம்.

இதுவரை ஞானரூபமான விபூதிகளை ( ஸித்திகளை ) விவரித்தார். இனி அடுத்த ஸூத்திரம் முதற்கொண்டு கிரியாரூபமான ஸித்திகளை விவரிக்கிறார்.

**38.** 𑌬𑌨𑍍𑌧𑌕𑌾𑌰𑌣𑌶𑍈𑌥𑌿𑌲𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌸𑌂𑌵𑍇𑌦𑌨𑌾𑌚𑍍𑌚
𑌚𑌿𑌤𑍍𑌤𑌸𑍍𑌯 𑌪𑌰𑌶𑌰𑍀𑌰𑌾𑌵𑍇𑌶𑌃 ॥

பந்தத்திற்குக் காரணமானதை ( புண்ணிய பாபகர்மத்தை ஸமாதியினுல்) கழுவும்படி செய்தலினுலும், மனஸ் சஞ்சரிக்கும் ( நாடிகளின் ) மார்க்கத்தை அறிவதினுலும் மனத்திற்குப் பரகாயப் பிரவேசம் செய்யும் தகைமை உண்டாகிறது.

குறிப்பு :—யோகியானவன் தன் மனம் எந்தக் கர்மத்தின் காரணமாகத் தன்னுடைய சரீரத்தில் கட்டுப்பட்டிருக்கிறது என்பதை அறிந்தும், யோகாப்யா

**45** ததோ'ணிமாதிப்ராதுர்பாவ: காயஸம்பத்தத்தர்மாநபிகாதஶ்ச ॥

அதனால் (பூத ஜயத்தினால்) அணிமாதி ஸித்திகளும் காயஸம்பத்தும் உண்டாகின்றன. ப்ருதிவியாதி பூதங்களின் அதனதன் தர்மங்களினால் நிகழும் தடைகள் அற்ற நிலைமையை யோகி பெறுகிறான்.

குறிப்பு :—அணுவாகும் தன்மை (அணிமா), இலேசாகும் தன்மை (லகிமா), பெரிதாகும் தன்மை (மஹிமா), கனமாகும் தன்மை (கரிமா), தூரத்திலிருக்கின்ற வஸ்துவை அணுகும் தன்மை (பிராப்தி), காம அநுபவங்களுக்குத் தடையில்லாதிருத்தல் (பிராகாம்யம்), பிராணிகளைத் தன் வசப்படுத்தல் (ஈசத்துவம்), மனது முதலியவைகளை ஸ்வாதீனப்படுத்தல் (வசித்துவம்), இத்தகைய சக்திகள் இருந்தும் உண்மையான யோகிகள் இவைகளை வீணாக செய்யமாட்டார்கள். பூதங்களின் தர்மங்களால் தடைகளில்லை. என்றால் பூமிக்குள் நுழையலாம், ஜலத்தில் நடக்கலாம், ஆகாசத்தில் பறக்கலாம், தன்னை ஆகாசமும்கூட மறைக்கும்படியாகச் செய்துகொள்ளலாம்.

**46.** ரூபலாவண்யபலவஜ்ரஸம்ஹநநத்வாநி காயஸம்பத் ॥

காயஸம்பத் என்றால் அழகு (Beauty) லாவண்யம், (Grace) பலம், வைரம் போன்ற உறுதி (Hardness) என்பனவாம்.

**47.** க்ரஹணஸ்வரூபாஸ்மிதாந்வயார்த்தவத்த்வஸம்யமா-
திந்த்ரியஜய: ॥

கிரஹணம், ஸ்வரூபம், அஸ்மிதை, அன்வயம், அர்த்தவத்வம் இவைகளில் ஸம்யமம் செய்வதினால் இந்த்ரிய ஜயம் உண்டாகும்.

குறிப்பு :—கிரஹணம் = சப்தாதி விஷயங்களை கிரஹிக்கவல்ல இந்திரிய பிரவிர்த்தி (Sensation). இது இருவிதம் : ஸாமான்யம், விசேஷம். ஸ்வரூபம் = இந்திரியங்கள் அஹங்காரத்தினின்று உண்டாயின; மனம் ஸாத்விக அஹங்காரத்தினின்று உண்டாயிற்று. அஸ்மிதை அஹங்காரம். அன்வயம் = அவ்வஹங்காரத்தினின்று உண்டான அந்த ஸத்வ ரஜஸ் தமோ குணங்களென்ன மஹத்தத்துவம். அர்த்தவத்வம் = குணங்களிலிருக்கும் போகாபவர்க்கங்களைக் கொடுக்கும் தன்மை.

(1) இந்த்ரியங்கள் விஷயங்களை கிரஹிக்கும் நிலை, (2) இந்த்ரியங்களின் நிர்மலமான ஸ்வரூபம், (3) இந்த்ரியங்களுக்குக் காரணமான அஹங்காரமான அஸ்மிதை, (4) மேற்கண்டவைகளில் அநுஸரித்திருக்கின்ற மூன்று குணங்கள் (ஸாத்விகம், ராஜஸம், தாமஸம்) (5) இக்குணங்களிலிருக்கின்ற போகாபவர்க்கங்களை உண்டுபண்ணும் சக்தியாகிய இவைகள் ஒன்றின்பின் ஒன்றாய் உண்டான பரிணாமங்கள். இவைகளின்மேல் ஸம்யமம் செய்தலினால் இந்த்ரியஜயம் உண்டாகிறது. இந்த்ரியங்கள் அதனதன் பிரவிர்த்தியின்றியும், ஸம்யமின்றியும் தத்தம் நிலையில் இருப்பதை யோகி செய்து கொள்வானாகில் அப்போது ஒருவித ஆனந்தம் ஜனிக்கும்; அதற்கு "ஸானந்தம்" என்று பெயர்.

48. [illegible]

[illegible] ॥

அதனால் (இந்திரிய ஜயத்தினால்) மனோ வேகத்தை யோகியின் சரீரம் பெறுகிறது. சரீரத்தின் உதவியின்றியே (எல்லா தேசங்களிலும், காலங்களிலும் உண்டாகும் எல்லா விஷயங்களையும் உள்ளபடி) இந்திரியங்களுக்கு கிரஹிக்கும் சக்தியுண்டாகிறது. பிரதான ஜயம் உண்டாகிறது.

49. [illegible]

[illegible] ॥

ஸத்வம் வேறு, புருஷன் வேறு என்று நிச்சயமாக அறிந்திருக்கிற யோகிக்கு எல்லா வஸ்துக்களுக்கும் அதிஷ்டாதாவாகவிருக்கும் தன்மையும் எல்லா வஸ்துக்களையும் அறியும் சக்தியும் உண்டாகின்றன.

*குறிப்பு: ஸத்துவம் (புத்தி தத்துவம்) புருஷன் இவையிரண்டும் அவிவேகத்தினால் ஸாதாரண ஜனங்களுக்கு அபேதமாகக் காணப்படுகின்றன. இவ்விரண்டையும் வேறென்று யோகி அறிகிறான்.*

*எல்லா வஸ்துக்களுக்கும் மேலே நின்று அவைகளை ஸ்வாதீனமாக வைத்துக் கொள்ளும் தன்மையும் (அதிஷ்டாத்ருத்வமும்) ஸர்வக்ஞான சக்தியும் உண்டாகின்றன.*

50. [illegible]

[illegible] ॥

(அதில் முன் பிரஸ்தாபித்த ஸித்தியில்) வைராக்யத்தைப் பெறுவதினால் தோஷங்களுக்கும் (பூர்வகர்ம ஸம்ஸ்காரங்களுக்கும்) அவைகளின் காரணமான அவித்யை முதலான விதைகளுக்கும் நாசம் உண்டாகும். அதனால் யோகி கைவல்யத்தைப் பெறுகிறான்.

குறிப்பு:—(1) பூதஜயம், இந்திரிய ஜயம், பிரகிருதி ஜயம் ஆகிய இவை மூன்று ஸித்திகள்

(2) **தோஷங்கள்**—*பூர்வ கர்ம ஸம்ஸ்காரங்கள்.*

(3) **பீஜங்கள்**—*அவித்யை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம்*

(4) **கைவல்யம்**—*ஸாத்விக ராஜஸ, தாமஸ குணங்களினின்று விலகித் தனிப்பட இருத்தல், இதுவே அமனஸ்க நிலை. மனம் அற்ற ஸ்தானம். இந்த அவித்யா நிலையானது ஸம்ஸ்கார சேஷம் உள்ளது.*

(5) ஈச்வரனுக்கும் இந்நிலைபெற்ற யோகியான புருஷனுக்கும் இருக்கும் பேதம் என்னவென்றால், ஈச்வரன் குணங்கள் மூலமாய் ஸ்ருஷ்டி ஸ்திதி முதலிய கிருத்யங்களைச் செய்துகொண்டிருக்கிறான். யோகியான புருஷன் தன் கர்மபந்தத்தினின்று விலகி ஸ்வராஜ்யம் பெறுகிறான்.

**51.** ஸ்தான்யுபநிமந்த்ரணே ஸங்கஸ்மயாகரணம் புந:
அநிஷ்டப்ரஸங்காத் ॥

தேவர்களால் (தங்கள் ஸ்தானங்களுக்கு) பற்றுதலையும் கர்வத்தையும் கொள்ளற்க. திரும்பவும் அநிஷ்டங்கள் உண்டாகின்றமையால்.

குறிப்பு:—யோகிகள் 4 படியில் உள்ளவர்கள் :—(1) **பிரதமகல்பிகர்** (2) **மதுபூமிகர்** (3) **பிரக்ஞாஜ்யோதிஸ்** (4) **அதிக்ராந்த பாவனீயர்.**

பிரதமகல்பிகர் :—இவர் அப்பியாஸி, யோகத்தில் புகுந்தவர். ஸம்யமத்தில் ஆரம்பித்தவர். ஆனால் ஒரு ஸித்தியும் பெறாதவர்.

**மதுபூமிகர்** :—மதுமதி என்ற ருதம்பரா பிரக்ஞாநிலையில் இருக்கின்றவர் பூத ஜயம், இந்திரிய ஜயம் பெற முயலுகிறவர். **மதுபிரதீக** என்ற ஸித்தியை அடைய முயலுகின்றவர்.

பிரக்ஞாஜ்யோதிஸ் :—பூத ஜயம், இந்திரிய ஜயம் பெற்றதினால் தேவர்களால் ஸ்வர்க்க சுகத்திற்கு மூட்டப்படாதவர். மதுமதி என்ற பூமியையும் மது பிரதீகா என்ற ஸித்தியையும் அடைந்தவர். **விசோக, ஸம்ஸ்கார சேஷம்** என்ற நிலைகளை புருஷஸாக்ஷாத்காரம் பெறுவதற்காக அடையும்படி (ஸித்திகள் பெற அன்று) முயலுகின்றவர்.

அதிக்ராந்தபாவனீயர் :—மது பூமிகா, மது பிரதீகா, விசோகா என்ற மூன்று நிலைகளை யடைந்த ஜீவன்முக்தர். கைவல்யத்தை யடைந்தவர். 2-ம் பாதம், 27-ம் ஸூத்திரத்தில் இவரைப்பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறது.

இவர்களில் இரண்டாவது படி எய்தியவனுக்கே இந்த ஸூத்திரத்தில் சொல்லிய அபாயம் நேரிடும். தேவர்கள், இவன் மேலேறாமல் பல மயக்கங்களான உலக விஷயங்களினால் இவனை இழுப்பார்கள்.* பல ஆசைகள் வந்து பீடிக்கும். தன்னை தேவர்கள் வந்து கூப்பிடும்படியான தகைமை தனக்குண்டாயிருக்கிறதென்று அகம்பாவமும் கர்வமும் கொள்ளுவான். அப்படி ஏற்படுமாகில் யோக முயற்சி தளரும், குறையும், சோர்வு உண்டாகும். இந்தப் படியினின்று நழுவும்படியான நிலைமை உண்டாகும். அதை நோக்கியே எச்சரிக்கையாய் இருக்கும்படி இந்த ஸூத்திரம் உபதேசிக்கிறது. அப்படித் தன் முயற்சியில் எவ்வளவோ கஷ்டப்பட்டு அடைந்த, இந்த மாபெர உலக வாழ்வை விட்டு உயர்வடைந்த ஞானத்தை

* கடோபநிஷத்தின் முதலாம் வல்லியின் **நாசிகேதஸ்ஸை, யமதேவர்** பல வித மயக்கங்களுக்குள் ஆட்படுத்த முயலுகிறது இங்கு கவனிக்கத்தக்கது.

யில்லாமல் போகும். அந்நிலையில் யோகி முன் சொன்ன ஸம்யமத்தினால் வஸ்துக்களின் வேற்றுமை ஞானத்தை அறிகிறான். ஸ்தூலமான சித்திகளும் ஸூக்ஷ்மமான சித்திகளும் யோகிக்குத் தெரியவரும்.

54. தாரகம் ஸர்வவிஷயம் ஸர்வதாவிஷயமக்ரமம் சேதி
விவேகஜம் ஜ்ஞாநம் ॥

விவேகத்தினால் உண்டான ஞானம் தாரகம் என்று பெயர். இந்த ஞானத்தால் எல்லா விஷயங்களையும் எல்லாக்காலங்களிலும் ஒரே சமயத்தில் (யோகி இருக்கிற நிலையிலேயே) அறியும் தகைமை உண்டாகிறது.

குறிப்பு:—**தாரகம்** என்பதாவது கரையேற்றிவைக்கும் ஞானம். மோக்ஷத்திற்குக் கொண்டுபோகும் இயல்பினது. மதுமதி முதல் ஆரம்பிக்கிற யோகப் பிரமையானது இந்த ஞானத்தின் ஒரு பாகம். **ஒரேசமயத்தில்** என்றால் யாதொரு வரிசையுமின்றி, முறையுமின்றி ஒரே காலத்தில் நினைத்த மாத்திரையில் எல்லா விஷயங்களையும் அறிகிறான். அதாவது ஸர்வக்ஞன் என்றபடி.

55. ஸத்வபுருஷயோ: ஶுத்திஸாம்யே கைவல்யமிதி ॥

புத்தி புருஷ சம்பந்தமில்லாமலும், புருஷன் புத்தி சம்பந்தமில்லாமலும் இரண்டும் அதனதன் சுத்த சொரூப நிலைமையிலிருந்தால் கைவல்லியம் சித்திக்கும்

குறிப்பு:—கைவல்யம், தனிமையிலிருத்தல். **ஸத்துவம்,** அதாவது புத்தி தத்வம், அதில் புருஷன் பிரதிபிம்பிக்கிறான். ஸத்வம் தான் ஞானத்திற்கும் அஞ்ஞானத்திற்கும் காரணம். அதுவே அந்தக்கரணம். விஷயங்களைப் பற்றாமல் அந்தக்கரணம் அழிந்தாற்போல இருக்கிற நிலைமையில் புருஷன் ப்ரக்ருதி ஸம்பந்தமின்றி எந்த வஸ்துவினுடைய அபேக்ஷையுமில்லாமல் ஸ்வதந்த்ரனாகிறான். சுத்த ஸ்வரூபியாகிறான். அதுவே கைவல்யம்.

விபூதிபாதம் முற்றிற்று.

பகவான் பதஞ்சலி மஹரிஷி அருளிச்செய்த

# யோகஸூத்திரம்.

---

## 4-வது கைவல்யபாதம்.

---

[குறிப்பு:— இந்த பாதத்திற்கும் மூன்றிய பாதங்களுக்கு முள்ள சம்பந்தம் என்னவென்றால், முதலாம் பாதத்தில் யோகம் இன்னது என்பதும், இரண்டாம் பாதத்தில் யோகஸாதகங்களும், மூன்றாம் பாதத்தில் ஒரு அப்யாஸி அநுஷ்டிக்கும் ஸாதனங்கள் நேர்மையாக நடைபெறுகின்றனவா அல்லவா என்பதைப் பரீக்ஷித்துக் கொள்ளுகிறதற்கும் அதனால் யோகாப்யாஸத்தில் ருசி உண்டாவதற்கும் இயல்பினவான யோகஸித்திகளும், சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த அத்தியாயத்தில் யோகத்தின் பலனான கைவல்யமும் தர்மமேக ஸமாதியும் இன்னும் சில விஷயங்களும் சொல்லப்படுகின்றன.]

1. ஜந்மௌஷதிமந்த்ரதப: ஸமாதிஜா: ஸித்தய: ॥

**ஜாதியாலும் (பிறப்பாலும்) ஔஷதங்களினாலும், மந்த்ரத்தினாலும், தபஸ்ஸினாலும், ஸமாதியினாலும், (முன்சொன்ன) சித்திகள் உண்டாகின்றன.**

குறிப்பு:— சிலருடைய பிறப்புகளுக்கு ஜன்மத்தினாலேயே அணிமாதிகளில் சில ஸித்திகள் ஏற்படுகின்றன. மேலும் போன ஜன்ம கர்ம விசேஷத்தினால் அத்தகைய ஸித்திகள் ஏற்படக்கூடும். ஸாங்கிய சாஸ்திரத்தை உபதேசித்த கபில மஹரிஷி பிறக்கும்போதே ஸித்தராகப் பிறந்தாரென்று சொல்லப்படுகிறது. பக்ஷிகளுக்கு ஜன்மத்தினால் ஆகாயத்தில் பறக்கும் சக்தி உள்ளது போல.

மாண்டவ்யர் முதலிய முனிகள் ஔஷதங்களினால் ஸித்திகளைப் பெற்றார்கள். தமிழ்நாட்டில் ஔஷதங்களினால் ஸித்தி பெற்றவர்கள் இருந்திருக்கிறார்கள். ஔஷதத்தினால் காயஸித்தி பெற்றவர்கள் ரஸாயனர்கள் என்று பெயர் பெறுவார்கள். பிறந்து இறந்து புதிது புதிதாய் சரீரங்களை எடுக்கிறதைப் பார்க்கிலும் எடுத்த சரீரத்தை நீடித்தகாலம் சிரஞ்சீவியாக இருக்கும்படி செய்தல் கூடும் என்பது இவர்களின் மதம். பாஷாணத்திலும் கந்தகத்திலும் அநேக அத்புதமான சக்திகள் அமைந்திருக்கின்றன என்பது இவர்களின் கொள்கை. சில மூலிகைகளுக்கு ஸித்திகள் ஸாதிக்கக்கூடிய யோக்கியதைகளுண்டென்பதும் இவர்களுடைய ஸித்தாந்தம். இவைகளினால் தங்கள் சரீரத்தை சிரஞ்சீவியாக இருக்கும்படி செய்தவர்கள் அநேகர் இருக்கிறார்கள் என்று இவர்கள் சொல்லுகிறார்கள். மந்த்ரங்களும் இத்தகைய ஸித்திகளைக் கொடுக்க இயலும் என்று சிலர் அபிமதம். சரியான முறையாய் மந்த்ரங்களை ஜபிக்கும் பக்ஷத்தில் ஸித்திகள் கைகூடும். விச்வாமித்ரர் முதலியவர்கள் தபஸினாலும் மந்த்ரத்தினாலும் ஸித்திபெற்றவர்கள். தபஸ் என்

றும் விரதங்களினால் காயக்லேசம் செய்தல். ஹடயோக முறைகளும் இதில் அடங்கும். ஸமாதி அல்லது சித்த ஐகாக்ரியம். இதுதான் பதஞ்சலியாருடைய அபிமதம். இதைப்பற்றித்தான் இந்த சாஸ்திரம் கூறுகிறது. இதுதான் உண்மையான யோகமுறை. முந்திய நான்கினாலும் உண்டாகும் சித்திகளெல்லாம் ராஜயோகத்தாலுண்டாகும் மென்றும் இராஜயோகத்தினாலுண்டாகும் பரமசித்தியை முன்னவைகளடைவிக்கமாட்டா வென்றும் பாகவதத்தில் சொல்லியிருக்கிறது.

**2.** ஜாத்யந்தரபரிணாம: ப்ரக்ருத்யாபூராத்॥

பிரகிருதியினுடைய (குணசுபாவத்தின்) பிரவேசத்தினால், (வேறு) ஜாதிப் பரிணாமம் உண்டாகும்.

குறிப்பு:– ஒரு ஜன்மத்தில் பிறந்தவன் வேறு சரீரத்தைப் பெறுதல் எங்ஙனம்? அதன் முறையை அடுத்த சூத்திரத்தில் சொல்லுகிறார். அதன் தத்துவத்தை இதில் உபதேசிக்கின்றார்.

**3.** நிமித்தமப்ரயோஜகம் ப்ரக்ருதீநாம் வரணபேதஸ்து ததக்ஷேத்ரிகவத்॥

வேறு தேஹம் உண்டாவதற்கு ஹேதுவான பிரகிருதி அணுக்களை (புண்ணிய கர்மம் முதலான) நிமித்தம் உண்டாக்குகின்றதில்லை, ஆனால் (திவ்ய தேஹத்தை அடைவதில்) தடைகளைப் புண்ணிய கருமமானது குடியானவன்போல, நீக்கி வைக்கின்றது.

குறிப்பு: –ஒரு குடியானவன் ஜலத்தை வயலுக்குப் பாய்ச்சும் கர்மத்தில் தடைகளை மாத்திரம் விலக்குகிறான். பின்னர் ஜலம் ஓடுகின்றது. அம்மாதிரியாகவே புண்யகருமம் திவ்ய தேஹப் பிராப்திக்குத் தடையாயிருக்கும் இடையூறுகளை விலக்குகின்றது. ஒவ்வொரு ஜீவராசியிலும், ஒவ்வொரு மனிதனிடமும் பரிபூர்ணமான புருஷன் உண்டாகும்படியான சக்திகள், யோக்யதாம்சங்கள் குப்தமாக இருக்கின்றன. ஓஷதியினிடம் பிராணிகளாகும் அம்சமும் பிராணிகளிடம் மிருகமாகும் அம்சமும், மிருகத்தினிடம் மனிதனாகும் அம்சமும், மனிதனிடம் தேவனாகும் அம்சமும், குப்தமாக அமைந்திருக்கின்றன. அந்த மறைப்பான தடையை விலக்கவே, யோகி திவ்யசரீரத்தை அடைகிறான். நற்கருமங்கள் அவ்விடையூறான தடையைத் தவிர்க்கும்.

**4.** நிர்மாணசித்தாந்யஸ்மிதாமாத்ராத்॥

(தன்னுடைய ஸித்தியால் உண்டுபண்ணப்பட்ட சரீரங்களில் (யோகியானவன்) அஹங்காரத்தினின்று மாத்திரம் பல மனங்களை (உண்டுபண்ணுகிறான்.)

குறிப்பு:—மேற்கண்ட தடைகள் தபஸ் முதலியவைகளால் நீக்கப்படவே யோகியானவன் ஒரே சமயத்தில் பல விஷயங்களை அநுபவிக்க விரும்பிப் பல சரீரங்களை உண்டுபண்ணிக்கொண்டால் அவைகளில் தனித்தனி ஒவ்வோர் மனத்தையும்

நிர்மாணம் செய்து கொள்ளுகிறான். அம்மனஸ்களை எதினின்று நிர்மிக்கிறானென்றால் அஸ்மிதையி (அகங்கார தத்துவத்தி) லிருந்து என இந்த சூத்திரம் உபதேசிக்கின்றது.

விஷ்ணு புராணத்தில் வருகின்ற சௌபரியின் கதை* இங்கு கவனிக்கத்தக்கது.

5. ப்ரவ்ருத்திபேதே ப்ரயோஜகம்
சித்தமேகமநேகேஷாம் ॥

(பல மனஸ்கள் உண்டாக்கப்படுகின்றமையால்) பல பிரவிர்த்தி பேதங்கள் ஏற்பட்டாலும் ஒரே சித்தமானது (அஸ்மிதை, மேற்கண்ட) பல மனஸ்களை நடத்துகிறது.

குறிப்பு:— யோகியானவன் பல இடங்களில் வெவ்வேறு மனஸ்களையுடைய பல சரீரங்களை நிர்மாணஞ் செய்தாலுங் கூட (அஸ்மிதை) தான் என்ற ஒரே பிரத்யயம் எல்லாவற்றிலும் பிறக்கின்றமையால் பல மனஸ்கள் பல சரீரங்களிலிருந்தாலும் பேதமேயில்லை. ஒரே சரீரத்தில் பல இந்திரியங்களிருப்பினும், ஒரே மனஸ் அவைகளின் அநுபவங்களையெல்லாம் ஒன்றுபடுத்துகின்றது, தன்வசப்படுத்துகின்றது. அதுபோல யோகியானவன் பல சரீரங்களையும் அவைகளின்கண் பல மனஸ்களையும் உண்டுபண்ணிக்கொண்டு அவைகளின் மூலமாய் ஏற்படும் அநுபவங்களைத் தன்வசப்படுத்துகிறான்.

"ஒரே ஈச்வரன் தம்முடைய மனஸ் ஸங்கல்பத்தால் பல சரீரங்களை உண்டு பண்ணுகிறான், அவைகளை நடத்துகிறான், பின்பு அவைகளைத் தன்னிடம் லயப் படுத்திக் கொள்ளுகிறான்."—பத்மபுராணம்.

துல்யாபிப்ராயம் இங்கு கவனிக்கத்தக்கது. இது போல யோகியும் செய்கிறான்.

6. தத்ர த்யானஜமநாசயம் ॥

அவ்வாறு சித்தத்தில் தியானத்தினாலுண்டாகுவதற்கு ஸம்ஸ்கார பீஜம் (வாசனை) கிடையாது.

7. கர்மாசுக்லாக்ருஷ்ணம் யோகினஸ்த்ரிவிதமிதரேஷாம் ॥

யோகிக்கு கர்மங்கள் வெளுப்பு கறுப்பு என்பது இல்லை. மற்றவர்களுக்கு (கறுப்பு, வெளுப்பு இரண்டும் கலந்தவை என) கர்மங்கள் மூன்று விதம்.

குறிப்பு:—முன் சூத்திரங்களில் யோகியின் சித்தம் மற்றவர்களுடைய சித்தத்தைவிட வேறானது என்று சொன்னார். இதில் அவர் கர்மமும் மற்றவர்களுடைய கர்மத்தைவிட வேறானது என்கிறார்.

ஸ்மிருதி என்பது முன் அநுபவங்களின் ஞாபகம். ஸம்ஸ்காரங்கள் பூர்வ கர்மங்களில் ஏற்பட்ட வாஸனைகள். இவையிரண்டும் ஒரே தன்மையுள்ளவை. ஸம்ஸ்காரமானது வெளிப்படும் பக்ஷத்தில் ஸ்மிருதி போன்று வெளிப்படும். ஸ்மிருதியானது ஸம்ஸ்கார ரூபமாக ஆகிறது. வேறு ஜன்மம், வேறு தேசம், வேறு காலம் இவைகளின் கண் நாம் இருந்து செய்த கர்மங்கள் ஸம்ஸ்கார ரூபமாக ஏற்படுகின்றன. அவைகளுங்கூட வெகு காலத்திற்குப் பின்னால் வேறு ஜாதி, வேறு தேசத்தில் நாம் பிறந்தாலும் அவைகள் கிரமித்து, நாம் அநுபவிக்கும்படியாகவும் கர்மங்களுடைய பக்குவகாலம் வாய்த்தகாலத்தில் சேரிக்கும். அந்தந்த ஸம்ஸ்காரம் அந்தந்த விதமாகப் பரிணமிக்கிறது. அதாவது ஞான ஸம்ஸ்காரம் ஸ்மிருதியாகவும் இச்சா ஸம்ஸ்காரம் இச்சையாகவும், கிரியா ஸம்ஸ்காரம் கிரியையாகவும் பரிணமிக்கின்றன.

10. தாஸாமநாதித்வம் சாசிஷோ நித்யத்வாத் ॥

“நான் என்றும் இருக்கவேண்டும்” என்ற ஆசை நித்தியமாதலின் முன் பிரஸ்தாபித்த வாஸனைகள் அநாதியானவை.

குறிப்பு:—அவ்வாஸனைகளுக்கு ஆரம்பம் இல்லை. “நான் இல்லாமல் போகக்கூடாது, எப்போதும் இருக்கவேண்டும்” என்ற எண்ணமானது ஒவ்வொரு பிராணியிடமும் இருக்கின்றது. இது சுபாவமாக உண்டாகிறது என்று சொல்ல இயலாது. பிறக்கும்பொழுதே மரணபயம், துக்கம், துவேஷம், முதலான விருத்திகள், நிமித்தம் ஏற்படும்போது வெளியாகின்றன. முன் அநுபவமிருந்து, அது ஸம்ஸ்கார ரூபமாக இருக்கின்றமையால் தான் நிமித்தம் ஏற்படும்போது அந்த ஸம்ஸ்கார ரூபமான விருத்திகள் வெளியாகின்றன என்று அறியவேண்டும்.

தீபத்தின் பிரபை, (காந்தி) தீபம் இருக்கும் ஆவரணத்திற்குத் தக்கபடி ஸங்கோசம், விகாஸம் பெறுகிறது. அதுபோலவே மனத்தின் விருத்திக்கு, நிமித்தம் உண்டாக, ஸங்கோசம் அல்லது விகாஸம் ஏற்படுகின்றது. நிமித்தம் பாஹ்யம் ஆந்தரம் என இருவகை. பாஹ்ய முகமான நிமித்தங்கள் என்பது வெளிச்செயல்கள். அவையாவன ஸ்துதி, தானம், நமஸ்காராதிகள். அந்தர் முகமான நிமித்தம் சிரத்தை முதலியன. மைத்ரீ, கருணை, முதிதை, உபேக்ஷை முதலிய செய்கைகளை யோகியானவன் உலகத்தில் கடைப்பிடிக்கும் காலத்தில் செய்கிறான். இவைகள் வெளி நிமித்தங்களினால் உண்டாகின்றனவையல்ல, அந்த யோகியின் மனத்தின் உயர் நிலையால் ஏற்படுகின்றன.

மேற்படி இரண்டு நிமித்தங்களில் அந்தர் முகமான நிமித்தம் விசேஷ யோக்யதையை உடையது, அதிக உயர்வானது. ஞானம் வைராக்யம் இவையிரண்டையுமின்றி மேலானது யாதுளது? சித்தபலமின்றி யாரால் தண்டகாவனத்தை அழிக்கக் கூடும்? சுக்ராசார்யர் ஒரு காலத்தில் தம் மனோ பலத்தால் தண்டகா வனத்தை அழித்ததாகப் புராணங்களுரைக்கும். ஸமுத்திரத்தை அகஸ்தியரைப்போல் மகிமை பலமுடையவர்களாலன்றி வேறு யாரால் பானம் பண்ணக்கூடும்?

நான் என்பது இல்லாத காலத்தை நினைத்தல் கூடாமையால் நான் என்பது தொடர்புறுவது எப்போதும் முன்னது. அதனால் பூர்வ ஜன்மங்கள் இருந்திருக்கின்றனவென்று ஏற்படுகிறது.

**11.** [illegible]

[illegible]

ஹேது, பலன், ஆசிரயம், விஷயம் என்றவைகள் மனத்தின்கண் வாஸனைகள் தங்கும்படி செய்கின்றன. அவைகள் போய்த்துப் போனால் வாஸனைகளும் போம்.

**குறிப்பு:—ஹேது:** தர்மத்தினால் சுகமும், அதர்மத்தால் துக்கமும் உண்டாகும். ஸுகம் ஆசைக்குக் காரணம், துக்கம் த்வேஷத்திற்குக் காரணம். இவைகளால் முயற்சி உண்டாகிறது. இம்முயற்சி மனம் மெய் மொழிகளால் வெளிப்பட்டு ஒருவனுக்கு நன்மையையும், மற்றவனுக்குத் தீமையையும் செய்கிறது. இச்செய்கைகளால் தர்மம், அதர்மம், அவைகளால் சுகம், துக்கம், அவைகளால் ஆசை த்வேஷம் மறுபடியும் உண்டாகின்றன. இவ்விதமாக ஸம்ஸாரம் மேற்கண்ட ஆறு ஆரைக்கால்கள் உள்ள, என்றும் சுழலுகிற சக்ரம் போன்றதாம். இச்சக்ரத்தைச் சுழலச் செய்கிறது அவித்தை. இதுவே க்லேசங்களுக்கு மூலம். காரண காரியத் தொடர்பு தான் ஹேது வாகும்.

**பலன்:**—ஜாதி (பிறப்பு), ஆயுள், போகம் இவைகள் தர்மா தர்மங்களிலிருந்துண்டாகின்றன.

**ஆசிரயம்:**—எல்லாச் செயல்களுக்கும் மனம் தான் காரணம். எல்லா வாஸனைகளும் அதில் இருக்கின்றன. சாந்தி, தாந்திகளால் மனத்தூய்மை பெற்ற யோகியை சுகதுக்கங்கள் பற்றுவதில்லை. அதனால் சுக துக்கங்கள் அவன் மனத்தைத் தாக்காவாம். சுகதுக்கங்களுக்கு ஆசிரயம் போய்விடும்.

**விஷயம்:**—வெளியிலுள்ள விஷயங்கள், பற்றுதலை உண்டாக்கும். இது ஆலம்பனம் எனப்படும்.

இவை நான்குந்தான் வாஸனைகளைத் தங்கும்படி செய்விக்கின்றன. இவை நான்கும் அற்றுப்போனால், இவைகளை ஆசிரயித்துத் தங்கும் வாஸனைகளும் அற்றுப்போம்.

**12.** [illegible]

சென்றுபோன வஸ்துவும், வரப்போகும் வஸ்துவும் உண்மையில் எப்போதும் உள்ளவை. தர்மங்கள் நிகழும் நெறியில் பேதங்கள் இருப்பதால்.

**குறிப்பு:**—இறந்தகாலம், வருங்காலம், நிகழ்காலம் இவை மூன்றும் குணங்கள் பரிணமிக்கின்ற க்ரமத்தைக் குறிப்பிக்கின்றன. குணங்கள் வித்யாஸப்படுகின்றமையால் அவ்வேற்றுமையான பாவம் ஏற்படுகிறது. பரிணாமங்கள் ஒரு பிறவு

புருஷன் மாறுமல் இருக்கின்றமையால் புருஷனைப் பற்றிய மனோவிர்த்தி எப்பொழுதும் இருக்கின்றது. புருஷனுக்கு சூத்திரத்தில் பிரபு என்ற பதம் உபயோகித்திருக்கிறது. அதன் பொருள் ஸ்வாமி என்பதாம். மனத்தைவிடப் புருஷன் உயர்வான வேருனவன் என்பதைக் குறிப்பதற்கு பிரபு என்ற பதம் உபயோகித்திருக்கிறது. புருஷனுக்கு வேறு தன்மை என்னவென்றால், பரிணாமமின்மையாம்.

19 ந தத் ஸ்வாபாஸம் த்ருஶ்யத்வாத் ॥

அது (மனம்) ஸ்வப்ரகாசமுள்ளதன்று. அது (வேறொன்றால்) அறியப்படுகின்றமையால்.

குறிப்பு:—அக்கினியைப் போல மனம் தானும் பிரகாசமுள்ளது. வஸ்துக்களையும் பிரகாசப்படுத்துகிறது என்று வைநாசிகர் சொல்லுகின்றதை மறுத்தற்பொருட்டு இந்த சூத்திரம் ஏற்பட்டது. மனம் ஸ்வப்ரகாசம் உள்ளதன்று. அதுவும், மற்ற இந்திரியங்கள் மனத்தால் பிரகாசிக்கின்றமை போல மனமும் வேறொன்றால் பிரகாசிக்கின்றது. அக்கினி உபமானம் சரியன்று. புருஷனே ஸ்வபாவத்தில் பிரகாசமுள்ளவன் பரிணாமமில்லாதவன். பிரகாசித்தற்கு வேறு வஸ்துவின் அபேக்ஷை வேண்டியவனல்லன். மனம் வேறொன்றின் உதவியால் பிரகாசிக்கின்றதில்லை என்று சொல்ல முடியாது. "நான் கோபமாக இருக்கிறேன், நான் துக்கமாக இருக்கிறேன், நான் பயந்தவன்." இப்பேர்க்கொத்த அநுபவங்களால் சித்தத்திற்குப் பரிணாமங்கள் ஏற்படுகின்றனவென்று அநுபவரூபமாக சித்தத்தின் ஸ்வரூபத்தை யறிகிறோம்.

20. ஏகஸமயே சோபயாநவதாரணம் ॥

ஒரே சமயத்தில் இரண்டையும் கிரஹிக்க முடியாது.

குறிப்பு:—ஒரே சமயத்தில் மனத்திற்கு தன்னுடைய ஸ்வரூபத்தையும் வெளிவஸ்துவையும் கிரகிக்க முடியாது.

21. சித்தாந்தரத்ருஶ்யே புத்திபுத்தேரதிப்ரஸங்க:
ஸ்ம்ருதிஸங்கரஶ்ச ॥

முன் க்ஷணத்தில் உண்டாகும் விர்த்தியானது பின் க்ஷணத்தில் உண்டாகும் வேறு விர்த்தியால் பிரகாசம் பெறுமாகில், பின் க்ஷணத்தில் உண்டாகும் விர்த்தி அதற்குப் பின் க்ஷணத்தில் விர்த்தியை வேண்டுகிறது. அதனால் அநவஸ்தா தோஷம் உண்டாகிறது. ஸ்மிருதியில் குழப்பம் உண்டாகும்.

குறிப்பு:—புத்திக்கு ஸ்வாமியாகவும் போக்தாவாகவும் உள்ள புருஷனை அங்கீகரிக்காததினால் லோக வ்யவஹாரங்கள் குழப்பமாயிருக்கின்றன. பஞ்சஸ்கந்தங்களை ஒப்புக்கொண்டு, அவைகளை ஆளும் புருஷனை ஒப்புக்கொள்ளாததினால் தலை இல்லாத சரீரத்திற்கு அலங்காரம் செய்தமைபோல் ஆகும். ஸ்கந்தங்களைத் தள்ளவும் சாந்த நிலை பெறவும் குருவை நாடி குருசுச்ரூஷையும் செய்தல் வேண்

மெம் என்று சொல்லுகின்றார்கள். ஆனால் "எதற்காக இத்தன்மையான வழிபோ! அது இல்லை" என்று சொல்லுவது அறிவீனம். ஸம்புடைய ஸித்தாந்தத்தில் புரு ஷனுடைய ஸ்வாமியை ஒப்புக்கொள்ளுகிறபடியால் ஸ்ம்ருதி, ஞான முதலான எல்லா வ்யவஹாரங்களும் சேர்வையாக ஏற்படுகின்றன.

வைநாசிகர் ஆக்ஷேபத்தின் அவதாரிகை :—மனம் ஸ்வப்ரகாசமுடைய தன்று, புருஷனால் ப்ரகாசப்படுத்தப்படுகின்றது. இது சரியில்லை. பரிணாமமில் லாதவராயும் அஸங்கராகவும் ஸ்வப்ரகாசராகவும் இருக்கிற ஆத்மாவை மனஸ் ஸம்பந்தத்தினால் ஒருவித கிரியைக்கும் கர்த்தாவாகச் சொல்ல முடியாது. ஆத்மா வுக்கும் மனஸிற்கும், ஆகாசத்திற்கும் மற்ற பூதங்களுக்கு முள்ளது போல ஒரு வித ஸம்பந்தம் ஏற்படக் கூடியதில்லை. அதனால் போக்தா என்று ஆத்மாவைச் சொல்லுகிறது எங்ஙனம்? இந்த ஆக்ஷேபத்திற்கு அடுத்த ஸூத்திரத்தில் ஸமாதானம் வருகிறது.

**22.** சிதேரப்ரதிஸங்க்ரமாயாஸ்ததாகாராபத்தௌ ஸ்வபுத்தி ஸம்வேதனம் ॥

ஒன்றிலும் ஸம்பந்த மில்லாத அஸங்கமான சைதந்யம் (புருஷன் புத்தியில் பிரதிபிம்பிக்கும் போது) புத்தியின் ஸ்வரூபத்தை யடைகிறது. அப்போது தனது புத்தியை நன்றாக அறிதல் உண்டாகிறது.

குறிப்பு:—ஒன்றிலும் ஸம்பந்த மில்லாத, யாதொரு பரிணாமமுமில்லாத சைதந்யம் சலத்துடன் இருக்கின்ற விஷயங்களுடன் ஸம்பந்தப்படும்பொழுது பரிணாமமுள்ளதுபோலும் ஸம்பந்த முள்ளதுபோலும் காணப்படுகிறது. ஸூர்ய பிம்பம் ஜலத்தில் தோன்றுவது போல புருஷனிடமுள்ள ஞானவிருத்தியானது புத்தி விருத்தியை அடைந்ததுபோல தோன்றுகிறது. இதற்குப் பிரமாணம், ஸத்ய மான பிரஹ்மத்தின் (புருஷனின், ஆத்மாவின்) ஸ்தானமாக உபநிஷத்துக்களில் குகையென்று சொல்லியிருப்பது பாதாள லோகமன்று, மலைக்குகையன்று, இருள் அன்று, கடல்களின் ஆழ்ந்த பாகங்கள் அன்று, ஆனால் சரீரத்தில் காணுமுள்ள புத்திவிருத்தியேயாம், பிரஹ்மசைதந்யமானது புத்தி விருத்தியுடன் அபின்னமாகக் கலந்திருக்கின்றது போலத் தோன்றுகிறது.

**23.** த்ரஷ்ட்ருத்ருச்யோபரக்தம் சித்தம் ஸர்வார்த்தம் ॥

சித்தமானது (மனமானது) புருஷனுடனும் விஷயங்களுடனும் ஸம்பந்தப் படுகின்றமையால், எல்லா விஷயங்களையும் அறியும் தன்மையை உடையதாகிறது.

குறிப்பு :—சுத்தமான விருத்தியால் புருஷனுடனும், அசுத்தமான விருத்தி யால் விஷயங்களுடனும் மனமானது ஸம்பந்தம் பெறுகிறது. புருஷனுடன் நேரில் ஸம்பந்திக்குங்கால் அறிவுமயமாகவும், விஷயங்களுடன் இந்த்ரியங்கள் மூலமாய்ப் பற்றுகையில் பரிணாம முள்ளதாகவும் ஆகிறது. மனஸுக்குப் புருஷனுடன் ஸம்ப ந்தமில்லாத சலனமின்மையால் சிலர் மனமே ஆத்மாவென்று மயங்குகின்றார்கள். ஸ்படிகம் அதன் ஸமீபத்திலுள்ள செம்பருத்திப் புஷ்பத்தின் சாயையைப் பெற்று

ஷனுக்கும் ஸத்வத்திற்கும் அந்தக்கரணத்திற்கும் உள்ள வித்யாஸத்தை யுள்ளபடியே அறிய யத்நம் செய்திருக்கிறான் என்று தெரியவரும். புருஷன் இத்தன்மையன் என அறிய அவாவுள்ளவனாக இருப்பான் அதை அறிந்து 'நான்' என்றபாவனையும் துறந்து விடுவான்.

**26.** ததா³ விவேகநிம்நம் கைவல்யப்ராக்³பா⁴ரம் சித்தம்॥

**(அவ்விதம் அஹம்பாவனை அற்றுப்போன) போது மனமானது விவேகத்தில் மூழ்கி கைவல்ய நிலையை அடைகிறது.**

குறிப்பு:—இது காறும் விவேகமில்லாமையால் விஷயாதிகள் மனத்தைப் பற்றிக்கொண்டிருந்தன. அதனால் மனம் ஸம்ஸார மார்க்கத்தை நோக்கி நடைபெற்றது, இப்போது புருஷன், பிரகிருதி இவைகள் வேறு என விவேகம் அடைந்து, கைவல்ய பாவனையையுடையதாக மனம் ஆகிறது.

**27.** தச்சி²த்³ரேஷு ப்ரத்யயாந்தராணி ஸம்ஸ்காரேப்⁴ய:॥

**கைவல்யத்தை நோக்கி ஸமாதி கொள்ளும் காலம் நீங்கலாக இடைவெளிகளான மற்ற காலங்களில் பூர்வ வாஸனைகளினின்று வேறு விர்த்திகள் உண்டாகும்.**

குறிப்பு:—நிரோதித்த பிரத்யயம் இருத்தல் என்றால், நிரோத விர்த்தி ஒன்றின் பின் ஒன்றாய்த் தொடர்பாய் தைல தாரை போல் நிகழ்தல் என்பதாம். ஒரு விர்த்திக்கும் மற்றொரு விர்த்திக்கும் இடைவெளிகள் இருக்கின்றனவல்லவா? இவ்விடைவெளிகளில் பூர்வவாஸனையால் அவ்விர்த்திகள் உண்டாகக்கூடும்.

**28.** ஹாநமேஷாம் க்லேஶவது³க்தம்॥

**ஆனால் இப்பூர்வ வாஸனா விர்த்திகள் பாதிக்கின்றனவல்ல. க்லேசங்களைப்போல தஹிக்கப்பட்டிருக்கின்றமையால், வறுக்கப்பட்டிருக்கின்றமையால்.**

குறிப்பு:—அந்த விர்த்திகள் இவன் யோகத்துக்கு அந்தராயம், இந்த யோகியை பாதிக்கின்றனவல்ல. நாளடைவில் அவைகளின் வேகமும் வீர்யமும் குறைந்துகொண்டே வந்திருக்கின்றமையால், வறுக்கப்பட்ட விதைகள் போல விர்த்திகள் ஏற்படுகின்றன.

**29.** ப்ரஸங்க்²யாநே(அ)ப்யகுஸீத³ஸ்ய ஸர்வதா²
விவேகக்²யாதேர்த⁴ர்மமேக⁴: ஸமாதி⁴:॥

**பிரகிருதி புருஷ விவேகம் ஏற்பட்ட அளவிலேயும் கொஞ்சமேனும் பற்றில்லாமல் இருக்கிற யோகிக்கு எல்லா வழியிலும் விவேகம் பரவியிருக்கின்றமையால் தர்மமேகம் என்ற ஸமாதி கைகூடுகிறது.**

" அபாணிபாதோ ஜவநோ க்3ரஹீதா "

" பஶ்யத்யசக்ஷு: ஸ ஶ்ருணோத்யகர்ண: "

—ஸ்வேதாஸ்வதரோபநிஷத்.

" நோக்கின்றிக் கண்டு கைகளின்றிக்
 கொடுத்து, மறைநவில்வதாய
நாக்கின்றியறு சுவையுமினிது ணர்ந்துங்
 காலின்றி நடத்தல் செய்து
மூக்கின்றி மணங்கவர்ந்துஞ் செவியின்றிக் கேட்டும் "

என்ற பெரியார் பாசுரம் இந்நிலையிலுள்ள யோகியின் தகைமையை அறிவிக்கிறது.

**32.** தத: க்ருதார்தா2நாம் பரிணாம

க்ரமஸமாப்திர்கு3ணாநாம் ॥

அதற்குப் பிறகு குணங்கள் செய்யவேண்டிய காரியம் முடிவுபெற்றமையால், குணங்கள் ஒன்றின் பின் ஒன்றாய் வரிசையாய் பரிணமிக்கும் தன்மையும் முடிவு பெறுகிறது.

குறிப்பு :—குணங்கள் புருஷனுக்கு போகம், அபவர்க்கம் இவையிரண்டையும் கொடுப்பதாக ஏற்பட்டன. கைவல்ய நிலையைப்பெற்ற புருஷனுக்கு இவை வேண்டுவனல்ல.

**33.** க்ஷணப்ரதியோகீ பரிணாமாபராந்தநிர்க்3ராஹ்ய: க்ரம: ॥

ஒவ்வொரு க்ஷணத்திலும் (மாறிமாறிக்கொண்டிருக்கிற) குணங்களின் பரிணமிக்கும் வரிசையானது (யோகியால்) பரிணாமத்தின் அபராந்தத்தில் விலக்கத்தக்கதாக ஆகிறது.

குறிப்பு :—பூர்வாந்தம் என்றும் அபராந்த மென்றும் பரிணாமங்கள் இருவகை. பூர்வாந்தமென்பது, காரணமானது காரியமாகப் பரிணமிக்கும் வரையும்; அபராந்தம் என்பது, அக்காரியமானது மறுபடி வரவரக் காரணமாக ஸ்வபரிணாமமாகும் வரையுமாம். வஸ்துக்கள் கூடஸ்த நித்யம், பரிணாம நித்யம் என இரண்டுவித நிலைகளில் இருக்கின்றன. புருஷர்கள் கூடஸ்த நித்யர்களாம். குணங்கள் பரிணாம நித்யமாம். எந்த வஸ்துவினுடைய தர்மம் (குணம்) மாறிக்கொண்டிருக்கும்போது, மாறாமல் இருக்கிறதோ அது நித்யம். குணங்களின் காரியங்களான புத்தி, மனம் முதலியவைகள் யோகாப்யாஸத்தினால் வரவர அதிக ஸூக்ஷ்மமாகப் பரிணமித்துக்கொண்டு வருகின்றது. அப்பரிணாமம் முடிவு பெறுங்காலத்தில் அபராந்தம் என்று பெயர். அந்த ஸ்திதியில் புருஷஸாக்ஷாத்காரத்தை யோகி பெறுவான். அதற்குமேல் புத்திக்கு யாதொரு பரிணாமமும் இல்லை. இதுவே தர்மமேக ஸமாதியாம்.

